45-2

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிதூது.

## வில்லிபுத்தூராழ்வார்

அருளிச்செய்தமூலமும்.

காஞ்சிபுரம்

## குமாரசுவாமிதேசிகர்

செய்தபுதியவுரையும்.

இஃது

கடம்பாடி

## சுப்பராயஉபாத்தியாயரால்

பார்வையிடப்பட்டு

கார்ஞேடை

## இலட்சுமணமுதலியாரால்

சைதாப்பேட்டை

வீரபத்திரசெட்டியா
ரவர்களது

லக்ஷ்மிவிலாசஅச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிகிருது௵மார்கழிமீ 1911.

ஸ்ரீராமஜயம்.

தந்தமுறியிலவர்வைத்ததயிர்பால்வெண்ணெயெட்டாமற்... *
குந்தியுரலின்மீதேறியிள்கோவியர்முன்கூத்தாடி.... ... . *
நந்தன்மனையிலசோதையிருநயனங்களிக்கவிளையாடு...... *
மைந்தனிருதாளொருநாளுமறவாதாரோபிறவாதார்.........*

இருக்கு, எசுர் - சாமம் - அதர்வணம் - என்றுசொல்லப்பட்ட நான்குவேதங்களோடு மொன்றாகவைத்து ஐந்தாகவெண்ணப்பட்டதாய் தவசிரேஷ்டராகிய வேதவியாசர் வடமொழியில்திருவாய்மலர்ந்தருளியபடி பர்வதசிரேஷ்டமாகிய மேருவினிடத்தில் தேவசிரேஷ்டராகிய விநாயகமூர்த்தியானவர் தமதுதிருக்கரத்திலிருக்கும்வெண்கோட்டினால்? எழுதியிருக்கின்றபிரகாரங் கவிசிரேஷ்டராகிய ஸ்ரீவில்லிபுத்தூராழ்வாரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட ஸ்ரீமஹாபாரதத்தில் - உத்தியோகபர்வத்தில்! ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர்பாண்டவர்களுக்காகத்துரியோதனமஹாராசாவினிடத்தில்தூதுபோய் அவன்செய்த மோசங்களினின்று தப்பி மீண்டருளியசரித்திரமாகிய கிருஷ்ணன்தூதென்று சொல்லப்பட்டகாவியத்திற்குள்தலசிரேஷ்டமாகிய திருக்காஞ்சியில் வசிக்காநின்ற புலவர்திலகராகிய குமாரசுவாமிதேசிகரால் தெளிவாகநூதன உரைசெய்யப்பட்டு மூலமும் உரையுமாக அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.








ஸ்ரீராமஜயம்.



# ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிதூது

## மூலமும்உரையும்.



## காப்பு.

### விநாயகஸ்துதி.

நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே.....*
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநாள் ..*
ஏடாகவடமேருவெற்பாகவெண்கூரெழுத்தாணிதன்.........*
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ......*

(எ-து) நெடியகடல்சூழ்ந்தபூலோகத்திலேவேதம்நாலுடனேஐந்தாம்வேதமென்னப்பிரசித்தமாகநிலைநிற்கக்குறைவில்லாதமெய்த்தவத்தையுடைய வேதவியாசமஹாமுனிமகாபாரதஞ்சொன்னநாளில்மகாமேருமலையைக் கையேடாகப்பிடித்துத் தனதுகொம்பைவெள்ளியகூரையுடைய எழுத்தாணியாகக்கொண்டு அந்தப்பாரதகதையையெழுதியவிநாயகக்கடவுளைப்பணிந்துபத்திசெய்வாம் எ-று,

### சரஸ்வதிஸ்துதி.

பொருப்பிலேபிறந்துதென்னன்புகழிலேகிடந்துசங்கத்.....*
திருப்பிலேயிருந்துவையையாற்றிலேதவழ்ந்தபேதை..... *
நெருப்பிலேநின்றுகற்றோர் நினைவிலேநடந்தோரேன.......*
மருப்பிலேபயின்றபாவை மருங்கிலேவளர்கின்றாளே...........*

(எ-று) பொதியமாமலையிலே சன்மித்துப்பாண்டியன் கீர்த்தியெ
ன்னும் பசும்பொற் றொட்டிலிலேகிடந்து சங்கப்பலகையிலேயிருந்
து வைகையாற்றிலே திருஞானசம்பந்தர்விட்ட ஏட்டினிடமாகஎதிரே
றித்தவழ்ந்த பெண்டையாகிய சரஸ்வதிபின்பு நெருப்பிலேபோடப்ப
ச்சோலையாய் வேகாமனின்று கற்றபேர்நினைவிலேநடந்து ஆதிவார
கழுகக்கொம்பிலே மருவியபூமிதேவிமருங்கிலே இடுக்குங்குழமண
ப்பிள்ளையாக வளர்கின்றாள் அக்கலைமகள் என்னாவிலேநிற்கும்படிக்
குநமஸ்கரிக்கிறேனென்றவாறு. *

(பாடற்றொகை.)

தருமமெய்த்தருமனைவத்தாளிணைசிவப்பமாயோன்...*
அரவுயர்கொடியோன்பக்கலழகுறநாடுவேண்டித்... *
துரகதவிரதமேறித்தூதுபோய்மீண்டபாடல்.........*
இரவியங்கதிர்போல்வீசுமிருசதத்தறுபத்தொன்றே...*

(எ-று) தருமமேயுருவாயிருக்கின்ற தருமராசன்தனக்காகத்துரி
யோதனனருகே தூதுபோகும்படி ஏவினதினாலே ஆதிபராபரவஸ்
துவாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தி நாலுவேதங்களினாலுங் காணப்ப
டாதபாதாரவிந்தஞ்சிவக்கநகுதிரைகட்டியஅலங்கிருதமானஇரதத்தி
லெழுந்தருளி அஸ்தினாபுரியென்னும் பட்டணத்துக்குப் போய்ச்சர்
ப்பகொடியோனாகிய துரியோதனனை அழகுபொருந்தியநாடுகேட்
டு அவனுடனே யுத்தப்பிரசங்கம்பேசி மீண்டதைக்குறித்தபாடல்சூரி
யகிரணம்போலப் பிரகாசிக்கின்ற இருநூற்றறுபத்தொன்றுமென்
றவாறு. *

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிஸ்துதி.

பேர்படைத்தவிசயனுடன் மும்மைநெடும்பிறவியினும் பிரியானா
கிச், சீர்படைத்தகண்ணமையினாற்றேரூர்தற் கிசைந்தருளுஞ்செங்கண
மாலைப் பார்படைத்தசுயோதனற்குப் படையெடேனமரிலெனப்ப
ணித்தகோவைக், கார்படைத்தநிறத்தோனைக் கைதொழுவார்பிறவா
ழிக்கரைகண்டாரே ... ................... ............... .........*

(எ-று) பூலோகமெங்குஞ் சௌரியத்தினாலே பேர்படைத்த அர்ச்
சுனனுடனே இரணியவதைநிமித்தமாக எழுந்தருளினபோது பிரக
லாதனனாகியும்இராவணவதைநிமித்தமாகஎழுந்தருளினபோதுவிபூ
ஷணனாகியும் பூமிபாரந்தீர்ப்பதுகாரணமாகஎழுந்தருளினபோது அ

அர்ச்சுனனாகியும் இப்படி மூன்றவதாரத்திலும் பிரியாதவனாகியும்
சீர்படைத்தநட்பினாலே அந்தஅர்ச்சுனனுக்குரதசாரதியாகயிசைந்த
ருளியசெந்தாமரைக்கண்களையுடையமாலை பூமியையாளுகின்ற துரி
யோதனன்வந்து வேண்டினபடியினாலே அந்தப்பாரதயுத்தரங்கத்தி
லேநான்ஆயுதங்கையிலெடுப்பதில்லையென்றுஉறுதிசொன்னதேவரா
சனைமேகவண்ணனான ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியைகைதொழுதவர்கள்பிற
ப்பென்னுங்கடலைநீந்திமுத்தியாகியகரையைக்கண்டவர்கள் என்று *

(நூல்.)

ஞானமன்போடினிதுரைத்துஞானமுனிபகன்றதற்பின்சாமபேத
தானதண்டமெனுநிருபர்தருமமுறையிற்புகலுந்தகுதிநோக்கித், தூத
றுந்தண்டுளவோனைத்தூதுவிடுவதற்கெண்ணஞ்சுனைகடோறும், என
லந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்பினனே.

(எ-து) தருமபுத்திரமகாராசன்வனவாசம்பன்னிரண்டுவருஷமும்அ
ஞாதவாசமொருவருஷமும்ஆகப்பதின்மூன்று வருஷமுந்தொ
லைத்து உபலாவியமென்னும் பட்டணமேவந்திருந்து துரியோதன
ன்பக்கல்உலூகமகாமுனியான தன்னுடையபுரோகிதனை அனுப்பத்
துரியோதனன் தன்னுடையதகப்பனான திருதராட்டிரனுடனேஉசா
விக்கொண்டு சஞ்சயமாகாமுனியான தன்னுடையபுரோகிதனை அ
ழைத்துநீர்போய் ஞானப்பிரசங்கம்பண்ணித் தருமபுத்திராதியரை
இன்னம்வனவாசமே போகத்தக்கதாகச்சொல்லிவாருமென்ன அந்த
ப்படியேபுரோகிதன்ஆசீர்வதித்துஞானப்பிரசங்கம்பண்ணி நீங்கள்
இன்னந்தபசுபண்ணுவதே உறுதியென்றுசொல்ல, அதைமறுத்துச்
சத்துருசங்காரஞ்செய்து பிரதிக்கினைமுடிப்பேனென்று வீமசேன
ன்சொல்லிஅனுப்ப அந்தப்படியேசஞ்சயமகாமுனி போனபின்பு
சாமபேததானதண்டமென்னும்இராசநீதிமுறைமைவழுவாமல்சொ
ல்லத்தக்கவொன்றறிந்துபரிமளம் பொருந்திய பரிசுத்தமாகிய துளப
மாலையணிந்த ஸ்ரீகிருஷ்ணதேவனைத்தூதுவிடுவதற்கு எண்ணஞ்சுனை
கள்தோறுஞ்செந்தேனையுடையதண்ணியமலைகள் மிகுந்ததேனை நி
றைக்கின்றகுருநாட்டுக்கதிபதியானதருமபுத்திரமகாராசன்சொல்ல
த்தொடங்கினனென்றவாறு. (உ)

செஞ்சொன் முனிசஞ்சயனுக்கியா முரைத்தகருமமுழு
ன்சென்றகாலை, அஞ்சொன்முனிபுரோகிதனுக்கவனிசை

த்தகருமமுநீயறிதியன்றே; நஞ்சுதனைமிசவருந்திநன்மரு
ந்துமந்திரமும் விரைந்துநாடாத், துஞ்சினர்தங்களைப்
போலவிருக்குமதொயார்மனத்துமிருக்குஞ்சோதி .. *

(எ-து) செவ்வையானசொற்போலேசொன்னசஞ்சயமகாமுனிக்குநாம்சொன்ன வசனமும் நாமனுப்பமுன்போகிய உலூகமகாமுனியானபுரோகிதனுடனே துரியோதனன் அப்போதுபேசினவசனமும்தேவரீருடைய திருவுளமேயறியுமல்லவோவிஷத்தைக்குடித்து அதுதீரதல்லமருந்தும் மந்திரமும் கடுகவிசாரியாமல் வீணிலேஜீவனைவிட்டவர்களைப்போல நாங்கள்போகாதபடிக்கு ஒருபுத்திஎங்களுக்குப்போதிக்கவேண்டும் சர்வலோகத்தோர்மனதிலு மிருந்துவிளையாடுகின்றசோதிசொரூபரேயென்று பின்னுஞ்சொல்லுகிறான் தருமராசனென்றவாறு. (௩)

அருஞ்சமரம்புரியும்வகை யவர்துணிந்தாராமாகி லதுநன்றி
யாமுத், பெருஞ்சமரம்விளைக்குமது கடனன்றென் றருள்வெ
ள்ளம்பெருகக்கூறும்; பொருஞ்சமரநெடுமுரசப் பூங்கொடி
யோன்றனைநோக்கிப்புயல்போல்வாண, னிருஞ்சமரந்தொலை
த்தபிரானிளைஞரையுமுடனிருத்தியியம்பினனே....... ...*

(எ-து) குருக்ஷேத்திரபூமியிலே அரியயுத்தஞ்செய்யத்தக்கதாகத் துரியோதனனாதியர் சம்மதித்ததேயுண்டாகில்அதுநல்லது; நாம்முந்தியுத்தஞ்செய்யச்சம்மதித்துச் சொல்லுகிறது முறைமையல்லவென்றுகிருபாவெள்ளம்பெருகும்படிசொல்லிய பொருகின்றநெடியமுரசக்கொடிபடைத்ததருமபுத்திரமகாராசனைப்பார்த்துமேகம்போன்றஆயிரம்புஜகிரியுடைத்தவாணாசுரனைச்செயித்தஸ்ரீகிருஷ்ணஸ்வாமியானவர்-வீமசேனன்-அர்ச்சுனன்-நகுலன்-சகாதேவனென்று சொல்லப்பட்ட இளைஞரையுங்கூடவைத்துக்கொண்டு இவ்வாறு சொல்லினரென்றவாறு. (௪)

செப்வராவினமுகளுந்திருநாடுபெறநினைவோசென் றுமீளப் .....*
பைவராயருங்கானிற்பயின்றுதிரிதரநினைவோபகைத்தபோரில் ...*
உய்வராரெனவினைவினுருத்தெழுந்துபொரநினைவோவுண்மையாக
ஐவராமவனிபர்க்குநினைவெதென் றருள்புரிந்தானமரர்கோமான்..*

எ-துவயலெங்கும்வராலினங்கள்குதித்துவிளையாடுகிறசிறந்தகுரு நாடுவாங்கிக்கொண்டு அரசாட்சிசெய்யநினைவோ, இன்னம்பழைய

படியேதுன்பமுடையவராய்வனத்திலிருந்துதிரியநினைவோஅல்லது
பகைத்துச்செய்கின்றயுத்தத்திற்பிழைப்பார்யாரென்றுசொல்லத்து
ரியோதனனுதியனைப் பிரதிக்கினைப்படியேகோபித்துப்பொருதுசெ
யிக்கநினைவோஜவராகிய உங்க ளொவ்வொருவருக்குமிருக்கிறஉண்
மையானவெண்ண மென்னவென்று திருவுளம்பற்றினார்ஸ்ரீகிருஷ்ண
தேவரென்றவாறு ...... ... ... ... ............. ...... .... (௫)

வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கிலுயர்வனாக்கா
டென்னச்-செயிரமரில்வெகுளிபொரச் சேரவி ருதிறத்தோரு
ஞ்சென்றுமாள்வேமாங்-கயிரவமுந்தாமரையுங் கமழ்பழனக்கு
ருநாட்டிற் கலந்துவாழ உயிரனையாய் சந்துபட வுரைத்தரு
ளென்றுனறத்தினுருவம்போல்வான்...................*

எ-து. வைராக்கியமென்னுங் கடூரமாகியநெருப்பை அதிகமா
க மூட்டிவளர்த்தால்தானேயிழைந்தெரிந்து மாய்ந்துபோகின்றமூ
ங்கிற்காடென்று சொல்லும்படி குற்றம்பொருந்திய யுத்தத்திலே
கோபமூண்டு இரண்டுதிறத்தோரும் ஒரேதரமாய்மாண்டுபோவோ
மப்படிவாராமல்செவ்வல்லியுந்தாமரையும்பரிமளிக்கின்றவயல்கள்
சூழ்ந்தகுருநாட்டிலே அம்மலர்களைப்போல நாங்கள்ஒருமித்துக்கூ
டிவாழும்படி எங்களுயிரையொத்த ஸ்ரீகிருஷ்ண தேவரேநீர்தூது
பொருந்த அவர்களையும் எங்களையுங்கூட்டியருளவேண்டுமென்றார்த
ருமத்தின்வடிவம்போலவிளங்கிய தருமபுத்திரர்.—எ-று (௬)

அரவுயர்த்தோனுடன்மறுசூதாடிநீர் வென்றவந்நாளவன்றான்
சொன்ன, விரதமொழிதவிராமல் வெங்கானம்போய்மீண்டீர்
வெய்யோனுங்கள்,குருநிலத்திற்பாதியுமேகொடாதிருந்தாலாங்
கவனைக்கொன்றுபோரி, லிருநிலத்தை யாளவினித் துணிவதே
கடனென்றனெம்பிரானே...... .......... ............... ...*

எ-து. சர்ப்பக்கொடிபடைத்த துரியோதனனுடனே நீங்கள்மறு
சூதாடிவென்றபோது அவன்சொல்லியசொற்றவறாமல்பன்னிரண்டு
வருஷம்வனவாசமும் ஒருவருஷம் அஞ்ஞாதவாசமும் போய்வந்தீர்
கள்வெய்யவனாகிய அந்தத்துரியோதனன் உங்களுடையபூமியிலே
பாதியைக்கொடாமற் போனானேயானால்அவனைக்கொன்றுபோர்மு
கத்திலே பெரியபூமியைஆளுகைக்குத் துணிவதே முறைமையென்
றார்ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு (௭)

ஞரவனாயுங்கிளைஞனாயுங் குலத்திரிய துணைவனாயுங்கொன்று
போர்வென், றரவநெடுங்கடலாடையவனியெலாந்தனியாளும
ரசுதன்னில், கரவுறைபுமனத்தானை முனிக்குரைத்த மொழிப்
படியேகானந்தோறும், இரவுபகல்பலமூலசருகுநுகர்ந் துயி
ர்வாழ்தலினிதநன்றே.......................... ............ .....*

எ-து. ஆசாரியனையுஞ் சுற்றத்தாரையுங் குருகுலத்துக்குரியஅ
ண்ணன்தம்பிமாரையும் இன்னும்பாட்டன்மாமன் மைத்துனன்மு
தலானபேரையுங்கொன்று போரில்வென்று சப்திக்கின்றநெடியகட
லாடையையுடைய பூமிமுழுவதுந்தனியேயாளுகிற அரசைப் பார்க்
கிலுங்கபடந்தங்கியமனமுடையபெரியதகப்பனார்புரோகிதருடனே
சொல்லிஅனுப்பியசொற்படியேவனந்தோறும்போய்இரவும்பகலு
ங்கனிகாய்கிழங்கு சருகுகளைப்புசித்துப்பிழைத்துக்காலம் போக்கி
றதுமிகவும்நல்லதென்றார் தருமபுத்திரரென்றவாறு. (அ)

கோதிலானிந்தமொழிகூறத்துமாதியான் கூறலுற்றான்.....*
மோதமருக்கிளைத்துநீர் மொய்த்தபெருங்கானகத்தே முடுகிச்
சென்றால், பூதலத்தோரேசாரோ புகன்றபெருவஞ்சினமும்
பொய்த்திடாதோ, நீதியோவெனவுரைத்தானுங்கதற்கு நிகழ்
தருமனிகழ்த்தலுற்றான்.......................... ...... ......*

எ-று. பழுதில்லாததருமபுத்திரமஹாராசர் இந்தவசனம்சொ
ன்னமாத்திரத்திலேஆதிமூலமான ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லுவார்த
ருமபுத்திரரேநீங்கள்மோதுகின்ற யுத்தத்துக்குத்தோற்றுநெருங்கிய
பெரியவனத்தினிடத்திலேவாசம்பண்ணவிரைந்து போனால் பூலோ
கத்திலுண்டானபேர் தாயாதியுடனேயுத்தம்பண்ணிச் செயிக்கமாட்
டாமற்போனார்களென்று ஏசமாட்டார்களோ தம்பிமார் சொன்னச
பதம்பொய்யாய்ப்போகாதோ இது நீதியாகுமோவென்று சொல்ல
அதுகேட்டுப்பின்னுஞ்சொல்லுவார் தருமபுத்திரரென்றவாறு (கூ)

நீதூதுநடந்தருளியெமதுநினைப்பவர்க்குரைத்தானினை வின்வண்ண
ந்;தாதுதியளிமுரலுந்தண்பதியுந்தாயமுந்தான்றராநுகில், மீதுது
வளைக்குலமும்வலம்புரியு மிகமுழங்கவெய்யகாலன், மாதுதர்மனங்
களிக்கப் பொருதெனினும் பெறுவனிதுவசையுமன்றே.... ......*

எ-து. ஸ்ரீகிருஷ்ணசுவாமிதேவரீர் எங்கள் நிமித்தந் துரியோதன
னிடத்துத் தூதுசென்று எங்களுடைய நினைவின் பிரகாரம் அவ

டனேபேசினால்அந்தப்படியேமகரந்தப்பொடியை யூதிவண்டுகள்மு ரலுகின்றகுளிர்ந்தபூஞ்சோலைகள்சூழ்ந்தநகரமும்பங்குங்கொடாமற் போனாலும் அதற்குமேல் ஊதப்பட்ட வெற்றிச்சங்குகளும் வலம் புரிச்சங்குகளும் வீரகாளம் வீரகொம்புமுதலியநானாவித வாத்திய ங்களுமுழங்கக் கொடிய எமதூதர்மனங்களிக்கப்போர்க்களத்திலேயு த்தஞ்செய்தானாலுந்தாயாதிபக்ஷத்திலுள்ள எங்கள் பூமியைப்பெ றுவேன் இது அபகீர்த்தியன்றென்று பின்னுஞ்சொல்லுவார் தரு மபுத்திரனென்றவாறு. - - - - - - (௰)

மூந்தூர்வெம்பணிக்கொடியோன் மூதூரினடந்துழவர் முன் றிற்றோறும், நந்தூரும்புனனாட்டின்றிறம்வேண்டு நானொன்று நல்கானாகில், ஐந்தூர்வேண்டவையிலெனி லைந்தில்வேண்டவை மறுத்தாலமர்வேண்டு, சிந்தூரத்திலதநுதற்சிந்தூரத்தின் மருப்பொசித்த செங்கண்மாலே............................*

(எ-து) மூந்திழூருகின்றசர்ப்பக்கொடியுடையதுரியோதனன் பதியான அஸ்தினாபுரத்துக்குத் தேவரீரெழுந்தருளிப்பள்ளர்முற்றங் கள்தோறுஞ்சங்கினங்களூருகின்ற நீர்வளம்பொருந்திய நாட்டைக் கேளும் அதுகொடானாகில் எங்களைந்துபேருக்கும் இந்திரப்பிரஸ் தம் எமப்பிரஸ்தம் அவந்திவாரணாபுரி அஸ்தினாபுரியென்கின்றஐந்தூ ருங்கேளும் அவையில்லையென்று மறுத்தானாகில் ஐந்துமனைகேளும் அவையுமில்லையென்றால்யுத்தத்துக்குச்சம்மதித்துவாரும்சிந்தூரத் திலதம்பொருந்திய மதயானைக்கொம்பொடித்தவீரம் பொருந்தியசிவ ந்தகண்களையுடையமாயனே என்றார் தருமபுத்திரனென்றவாறு(௰௧)

மூத்தோன்மற்றிவையுரைப்ப விளையோன்வெஞ் சினமனத்தி னமூளமூள, நாத்தோதாமிதுரைபதறக்கதுமெனவுற் றெழுந்தி றைஞ்சினாலமெல்லாம்; பூத்தோனேபூந்தவிசிற் பூவைபுணர் மணிமார்பாபுன்மையாவும், தீர்த்தோனேயூனமிலான் மானமி லாதுரைப்பதற்கென் செய்வதென்றான்......................*

(எ-து)மூத்தவராகியதருமபுத்திரமகாராசர்இந்தவசனஞ்சொ ல்லவீமசேனன்கெட்டு அவன்மனதிலேகோபம் அதிகரிக்கநாவினி டத்திலே குற்றமில்லாத சொற்கள்பதறச் சீக்கிரத்தில்வந்து எழுந் து ஸ்ரீகிருஷ்ணதேவனைத்துதித்துப் பூலோகமூழுது முண்டாக்கி னவனேபதுமாசனத்திலிருக்கின்ற மகாலட்சுமிபொருந்திய கௌஸ்

துவாபரணந்தரித்த மார்பையுடையவனே நம்பினபேர்குறைவுகளை த்தீர்த்தவனேகுற்றமற்ற அண்ணாவியார்மானமில்லாமற் சொல்லுவ தற்குநான் செய்வதென் னென்று பின்னுஞ்சொல்லுவான் அந்த வீமசேனனென்றவாறு. (௰௨)

விரிகுழற்பைந்தொடிநாணிவேந்தவையின்முறையிடுநாள்வெ
குளேலென்று,மரபினுக்குநமக்குமுலகுள்ளளவுந்திராதவசை
யேகண்டாய், எரிதழற்கானகமகன்று மின்னமும் வெம்பகை
முடிக்கவிளையாநின்றாய் - அரவுயர்த்தோன் கொடுமையினு
முரசுயர்த்தோயுனதருளுக்கஞ்சினேனே......................*

(எ-து) விரிந்தகூந்தலையும் பசியவளையலையுமுடைய துரோப திநாணமடைந்து-ரு-லட்க்ஷத்து-சூயசூத- பட்டவர்த்தனரும் - சூ- லக்ஷத்து -சூயசூத -மகுடவர்த்தனரும்-பதினெண்பூமிமன்னமண்ட லிகரும்-௫௬-தேசத்துஇராஜவர்க்கமும்வீஷ்மாசாரி துரோணாசாரி கிருபாசாரி அஸ்வத்தாமா- கர்ணன்- சகுனி- சல்லியன் - அதிரதர்.ம காரதர்- சமரதர்- முதலியசமஸ்தமானபேரும் - நிறைந்தராஜசபை யிலே அபிமானபங்கம் பண்ணுவித்தநாளில்தஞ்சமில்லாதபேர்போ லே முறையிட்டபோது நீ கோபியாதேயென்றுசொல்லி குருகுல த்துக்கும் நமக்கும் பூலோகமுள்ளவளவுந்திராதபழிப்புவசனமுண் டாக்கினீர் அதுவுமல்லாமல் கள்ளக்கவறுகொண்டு சூதாடித் தீப்படு கின்ற காடேபோகச்சொல்லிவிட அதைநீங்கியும் இந்தப்பகையை முடிக்க இளைக்கின்றீர் ஆதலாலே துரியோதனனுடைய கொடுமை யைப்பார்க்கிலும்தருமபுத்திரரே உம்முடையகிருபைக்கு மிகவும்ப யந்தேனென்று பின்னுஞ்சொலலுவான் வீமசேனன் எ-று. (௰௩)

காளுளவுனைவிடுத்தகண்ணிலாவருளிபிதன்காதன்மைந்தன்......*
தானுளுந்தரணியெல்லாமொருகுடைக்கீழ்நீயாளத்தருவனின்றே..*
மேனுணம்புரிமையறக்கவர்ந்தபெருந்துணைவனுனைவெறுத வண்ண
ம்,வானுளவான்வர்கோன்றன்பதமற்றவன்றனக்கேவழங்குவேனே ()

(எ-து) உம்மைவனவாசம்போகச்சொன்ன கண்ணில்லாத திருத ராட்டிரனுடைய ஆசைமிகுந்தகுமாரனான துரியோதனன் தானுளு கின்றபூலோகமெல்லாம் ஒருகுடைக்கீழ்இன்றைக்கேநீராளத்தருவே ன் அதுவுமல்லாமல்முன்னேநம்முடையஆட்சியானநாட்டைக்கைக் கொண்டஅந்தத்துரியோதனன்தேவரீரைவெறுத்துவிடாதபடி அவ

னுக்குவீரசொர்க்கத்தையாளும்படி. இந்திரபதத்தைத் தருவேனென்றபின்னுஞ்சொல்லுவான் வீமசேனனென்றவாறு. (௰௪)

போர்முடித்தானமர்பொருது புலம்புறுசொற்பாஞ்சாலிபூந்
தண்கூந்தற், கார்முடித்தானிளையோன்முன் சழறியவஞ்சின
முடித்தான்கடவுட்கங்கை, நீர்முடித்தானிரவொழித்தநீயறிய
ப்பூதலத்தினிலைநின்றோங்கும், பேர்முடித்தானிப்படியேயார்
முடிப்பாரிவனுடனேபிறந்தேனென்றான்............... ......*

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவரே எங்களண்ணாவியார்துரியோதனனுடனேயுத்தஞ்செய்துமுடித்தார் மேகம்போன்ற கூந்தலையும்புலம்புகின்றசொல்லையுடைய துரோபதி முடிக்கச்செய்தார் தம்பிமார் சபையிலேபேசியசபதங்களை முடிப்பித்தார்தெய்வத்தன்மைபொருந்திய கங்காசலமுடித்த உருத்திரதேவர்கையிலே பிர்மகபாலங்கொண்டு இரப்பதைத்தவிர்த்தருளிய உம்முடையசித்தமறியபூலோகத்திலே நிலைநின்றுயர்ந்த கீர்த்திமானென்னும்பேர் பிரசித்தமாகமுடித்தார் இப்படியாவர் முடிக்கப்போகிறார்கள் இவருடனேபிறந்தநான் கீர்த்திபெற்றதுபோதும்போதுமென்று பின்னுஞ்சொல்லுவான்வீமசேனனென்றவாறு. (௰௫)

அணிந்துவருஞ் சமரிலெதிர்ந்தரவுயர்த்தோனுடனரசரு
டலமெல்லாந், துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லையு
லகரசாளத்துணிவதல்லால், தணிந்தறமுங்கிளையுறவுங்கொ
ண்டாடித்தானின்னந்தனித்தாதேவிப், பணிந்திரந்துபு
விபெற்றுண்டிருப்பதற்கேதுணிகின்றான்பட்டபாட்டே *

(எ-து) போர்க்கோலங்கொண்டுவருகிறபெரிய யுத்தத்திலேஎதிர்ந்துதுரியோதனனுடனே எதிர்த்தஅரசர்களுடைய சரீரங்களெல்லாம் இரண்டுதுண்டாகும்படிப் போர்செய்து பழையபூலோகமுழுதும் அரசாக்ஷிசெய்யத் துணிவதல்லாமல் பொறுமைகொண்டு தருமத்தையுங் கிளையுறவையும்பாராட்டி இன்னம் ஒப்பற்றதூதுவிட்டு அவனைவணங்கிப் பூமியையாசித்துப் பெற்றுக்கொண்டுசௌக்கியமாகப்புசித்திருக்கவேயெண்ணுகிறார், தருமபுத்திரமகாராஜர் குருகுலம்பட்டபாட்டை என்னசொல்வேனென்றான் வீமசேனன்-எ-று (௰௬)

பரிவுடன்மற்றிவைகூறும் பவனகுமாரனைமலர்க்கைபணிந்து
நோக்கிக், குருகுலத்தோர்போரேற்றுமதுபார்க்குங்காற்

சுற்றமுண்டோ, வொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும்வா
ழ்வினைப்போலுறுதியுண்டோ, இருவருக்கும் வசையன்றே
விருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான்...... .... .........*

(எ-து) இப்படிப் பரிவாகச்சொல்லிய வாயுபுத்திரனாகிய வீமசேன
னை மலர்போன்றகைகயமர்த்திப்பார்த்துக் குருவம்சசிகாமணியேகுற்
றம்பார்க்குமிடத்திலே சுற்றமுண்டோ ஒருகுலத்திலே பிறந்தஅண்
ணன்தம்பிமாருடனே கூடிவாழும் வாழ்வினைபபோல் வேறொருஉ
றுதியுண்டோபெரிய விப்பூமியைப்பெறுவது காரணமாக எதிர்ப்ப
து நம்மிருவருக்குங்குற்றமல்லவோ வென்றார் தருமபுத்திரமகாராச
னென்றவாறு. (௰௭)

உரிமையுளதம்பியர்களுணர்வறியாமையினவைக்க ணுரைத்த
மாற்றம், பரிபவமோ்கேட்டோர்க்குப்பரிபவமென்பதுபிறரா
ற்பட்டாலன்றே, கருதிலதுமற்றெவர்க்கு மொவ்வாதோகண்ம
லரிற்கைபடாதோ, பொருதொழிலுங்கடைநிலத்திற் கிடந்த
தேயெனமொழிந்தான் புகழேபூண்பான்..................*

(எ-து) உரிமையுள்ள தம்பிமார்கள் அறியாமையினாலேசபை
யிலே சொன்னவார்த்தைகள் நமக்கு இழிவையுண்டாக்குமோஇழி
வென்பது அன்னியராற்சொல்லப்பட்டாலல்லவோ அதுநினைக்குமி
டத்தில் ஒருவருக்கும் பொருந்ாதோ கண்மலரிற்கைபட்டாலந்தக்
கையைத்துணிக்கலாமோயுத்தமும்பின்னடியிருக்கின்றதென்றார்,கீர்
த்தியையேதரிக்கின்ற தருமபுத்திரமகாராசனென்றவாறு (௰௮)

சூடுகின்றதுழாய்முடியோன் சுரருடனே முனிவர்களுஞ்சுருதி
நான்குந், தேடுகின்றபதஞ்சிவப்பத்திருநாடு பெறத்தூதுசெ
ல்லவேண்டாம், வாடுகின்றமடப்பாவை தன்வரமுமென்வரமு
ம்வழுவாவண்ணங், கேடுகின்றமொழியவன்பாலென்னைத்தூது
விடுகவினிக்கொற்றவேந்தே,........ ..........................*

(எ-து) துளபமாலையணிந்த ஸ்ரீகிருஷ்ணதேவரானவர் தேவர்
களும்முனிவர்களும் நாலுவேதங்களும் இன்னந்தேடுகின்றபாதஞ்
சிவப்பநடந்து நம்முடைய திருநாடுபெறும் பொருட்டுத்தூதுசெ
ல்லவேண்டாம் வாடுகின்ற துரோபதியினுடைய பிரதிக்கினையும்
என்பிரதிக்கினையுந்தப்பாவிதந் துரியோதனனிடத்தில் என்னைத்
தூதாக அனுப்புந் தருமபுத்திரரே யென்றான் வீமசேனனென்ற
வாறு. (௰௯)

மலைகண்டதெனவென்கைம்மலர்த் தண்டின்வலிகண்டுமக
வான்மைந்தன், சிலைகண்டுமிருவர்பெருந் திறல்கண்டுமெ
மக்காகத்திருமாநின்ற, நிலைகண்டுமிவள்விரித்த குழல்
கண்டுமிமைப்பளவினேரார்தம்மைக், கொலைகண்டுயகி
ழாமலவன்குடைக்கீழுயிர்வாழக்குறிக்கின்றாயே......*

(எ-து) மலையைக்கண்டதெனஎன்கையிலிருக்கின்றதண்டாயுதத்தி
னுடையபிரபலங்கண்டும் அர்ச்சுனனுடையகாண்டீபத்தின் வலிமை
கண்டும் நகுலசகாதேவருடையவல்லமைகண்டும் நமக்குச்சகாயமா
கஸ்ரீகிருஷ்ணதேவரிருக்கும் நிலைகண்டும் இந்தத்துரோபதிவிரித்த
அளகபாரங்கண்டும் ஒருநிமிஷமாத்திரத்தில் துரியோதனாதியரைச்
சர்வசங்காரம்பண்ணி மகிழ்ச்சியடையாமல் பகையாளிகுடைக்கீழ
வாழும்படிக் குறித்திருக்கிறீர், தருமபுத்தரரேயென்று பின்னுஞ்
சொல்லுகிறான் வீமசேனனென்றவாறு. (௨௰)

வெம்புயவீமனும்வெகுண்டுமீண்டுமிவைமெயடுத்துரைப்
பமேகமேனிப், பைம்பொனெடுந்தனித்திகிரிப் பரந்தா
மன்கருணையுடன்பரிந்துநோக்கி, யம்புவியின் முன்பிற
ந்தோரரசுநெறிமுறையுரைத்தாலதுகேளாமற், றம்பிய
ருமறுப்பரோதலைவவினிக்கடுங்கோபந்தணிகவென்றான்.

(எ-து) வெம்பப்பெற்றமனமுடைய வீமசேனனுங்கோபித்துமறு
படியும் இவ்வசனங்கள்சொல்ல மேகம்போன்றதிருமேனியும்பசி
யபொன்போன்றநெடியஒப்பற்றசக்கிராயுதமுமுடையஸ்ரீகிருஷ்ண
தேவர்கிருபையுடன் பரிவுகொண்டுபார்த்துப் பூமியிலேமுன்பிறந்த
தமையன்மார் இராஜநீதிமுறைமைசொன்னால்அதைக்கேளாமல்தம்
பியரானபேர்மறுப்பார்களோ தலைமைபெற்றவீமசேனனே இனிக
டியகோபத்தை க்ஷமிக்கக்கடவாயென்று திருவுளம்பற்றினார். எ-று.

மைக்காளமுகிலூர்திவானவர்கோன் றிருமதலை வணங்கிநின்று,
முக்காலங்களுமுணருமுகுந்தனுக்கு முதல்வனுக்குமொழிந்
தான்மன்னே, வக்காலம்பொறுத்தவெலாமமைபாமலின்னமி
ருந்தறமேசொன்னால், எக்காலம்பகைமுடித்துத்துரோபதியு
ங்குழன்முடிக்கவிருக்கின்றாளே...............................*

(எ-து) மைபோலுங்கரியமேகவாகனனான தேவேந்திரனுடையகு

மாரனை அர்ச்சுனன் வணக்கஞ்செய்துநின்று இறந்தகாலம் நிகழ்கா
லம் எதிர்காலமென்னும் மூன்றுகாலங்களையுமறியும்ஸ்ரீகிருஷ்ணதே
வருக்குந்தருமபுத்திரருக்குஞ்சொல்லினான் அதெங்ஙனெனில்அந்தக்
காலத்திலேதுரியோதனன்பண்ணினகுற்றங்களைப்பொறுத்தபொறு
மையெல்லாம்போதாமல் இன்னமிருந்துதருமத்தையேசொல்லினா
ல் இனியெந்தக்காலத்திற்பகையைமுடித்துத் திரௌபதியுங்கூந்தலை
முடிக்கவிருக்கின்றாளென்றுபின்னுஞ்சொல்லுவான். எ-று. (௨௨)

தேவராயினும்பழையதயித்தியராயினுமற்றுஞ்செப்புகின்றோர்,
யாவராயினுமெதிர்த்தோருயிருணவென்றிருப்பதுயா மென்கைவா
ளி, மூவராயவர்களுக்கு முதல்வனாகியமூர்த்திமுகிலேறுப்பூக, மீவரா
லுகளும்வயற்குருநாடேனிவனவன்பால்வேண்டுமாறே............*

(எ-து) தேவர்களானாலும் பழையவசுரரானாலும் பின்னுஞ்சொ
ல்லுகின்றவலிமைபெற்றபேர் எவர்களானாலும் எதிர்த்தபேர்களுடை
ய உயிரைத்தனக்குப் புசிப்பென்று நினைத்திருப்பது என்கைபா
ணமானது திரிமூர்த்தியானவர்களுக்கு முதல்வனாகிய ஸ்ரீகிருஷ்ண
மூர்த்தியே மேகந்தோய்கின்ற கமுகின்மேல் வராலினம்பாய்கின்ற
கழனிகள்சூழ்ந்த குருநாட்டையென்னநிமித்தம் தருமபுத்திரர் துரி
யோதனனிடத்தில் வேண்டுகிறதென்று பின்னுஞ் சொல்லுவான்
அர்ச்சுனனென்றவாறு.
(௨௩)

தீண்டாதகற்புடையசெழுந்திருவைத்துகிலுரியச் செயலொன்றி
ன்றி,நீண்டோனேகரியோனேநிமலாவென்றரற்றினளாய்நின்றுசோ
ர, மாண்டார்போலதுகண்டு மன்னவையில்யாமிருந்தமாகுதிர, வே
ண்டாமோவேண்டுவதுமேம்படுநல்லறமேயோவேந்தர்வேந்தே..*

(எ-து) அக்கினியைப்போல்தீண்டப்படாதபதிவிரத்தியமுடைய
திரௌபதியைச் சபையிலே துரியோதனன் துச்சாதனனை விட்டு
த்துகிலுரிந்தபொழுது அவள்ஒருசெயலுமில்லாதவர்போல்நெடிய
வனே நீலவண்ணனே நிர்மலசொரூபனே யென்று முறையிட்டவ
ளாகிநின்று சோர்வையடைய நிர்சீவரானபேர்போலே அதைக்
கண்டும் இராஜசபையில் யாங்களைவருமிருந்த குற்றந்தீரவேண்டா
மோ! இன்னம்இரப்பது மேம்பாடுபெற்ற நல்லதருமமாகுமோ,
மன்னர்க்குமன்னவனாகிய தருமபுத்திரரேயென்று பின்னுஞ்சொல்
லுவான் அர்ச்சுனனென்றவாறு. (௨௨)

பொன்னருந்திகிரியினன் போனாலும்புகழ்வேந்தன் புகன்ற
வெல்லாஞ்- சொன்னாலுமவன்கேளான் விதிவலியாற்கெடுமதி
கண்டோன்றதன்றே, எந்நாளுமுவர்நிலத்தி னல்விதைவித்தி
டினும்விளைவெய்திடாது- பன்னகந்தனக்கமிர்தங் கொடுத்தா
லும் விடமொழியப்பயன்கொடாதே ............................*

(எ-று) பொற்பிரகாசம் பொருந்திய சக்கரத்தையுடையஸ்ரீகி
ருஷ்ணதேவர் தூதாகப்போனாலும் புகழையுடைய தருமபுத்திரர்
சொன்ன வார்த்தைகளெல்லாஞ்சொன்னாலும் அந்தத்துரியோதன
ன்கேளான் விதியினுடையவலிமையாலே கெடுமதிகண்ணுக்குத்தோ
ற்றாது எந்தநாளுங்களர்நிலத்திலே நல்லவிதைகளை விதைத்தாலும்
விளையமாட்டாது படத்தையுடையசர்ப்பத்திற்குப் பால்கொடுத்து
வளர்த்தாலும் விஷத்தையல்லாமல் வேறொருபயனைக்கொடாதென்
றவாறு. (௨௰)

பார்த்தனிவைபுகன்றிறைவன் பணித்தருளவிருந்ததற்பின்பரி
வினோடுந்- தீர்த்தனிருபதமிறைஞ்சித் தருமனையுங்கைதொழு
துசினங்கொள்வேலா - னீத்தநெடுங்கட லெழுபாரடலைவர்பெ
றுவரெனுநிகழ்ச்சிபொய்யோ- கோத்தருமன் றனியாண்மை
கூறாதோகூறுகநீகொற்றவேந்தே..............................*

(எ-று) அர்ச்சுனன் இந்தவசனஞ்சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர்
கையமைக்கவிருந்தபின்பு நகுலனானவன் அன்புடனே ஸ்ரீகிருஷ்ண
மூர்த்தியினுடைய இரண்டுபாதங்களையும் வணங்கித்தருமபுத்திரனை
யும்வணங்கி முன்னிழந்த சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பெருமை
பொருந்தியபஞ்சபாண்டவர் பெறுவார்களென்றுசொல்வது பொய்
யோ தருமபுத்திரமகாராஜருடைய ஒப்பற்ற சௌரியஞ்சொல்லா
தோ நீசொல்வாய் வெற்றியையுடைய வரசனேயென்று பின்னுஞ்
சொல்லுவானென்றவாறு. (௨௧)

கேவலந்தீர்வரியபகை கிடக்கமுகில் கிளர்மழைக்குக்கிரியொ
ன்றேந்தும்- கோவலன்போயுரைத்தாலுங்குருநாடுமரசுமவன்
கொடுக்கமாட்டான் - நாவலம்பூதலத்தரசர் நாடிரந்தோமென
னம்மை நகையாவண்ணங்- காவலன்றன் படைவலியுமெனதுத
டம்புயவலியுங்காணலாமே..............................*

(எ-று) கேவலமாகத்தீர்வதற்கு அரியபகையிருக்கமேகஞ்சொரி

கின்ற அதிகமழைக்குப்பசுத்திரள்களைக் காக்கும்பொருட்டுக்கோவர்த்தனபர்வதத்தையேந்திய ஸ்ரீகிருஷ்ணதேவர் தூதுபோய்ச்சொன்னாலும் குருநாட்டையும் அரசையும் அத்துரியோதனன் கொடுக்கமாட்டான், ஆசையினாலே சம்புத்தீவாகிய இந்தப்பூமியிலேயிருக்கின்ற அரசர்கள் நாட்டையிரந்தோமென்று நம்மை நகைசெய்யாதபடித் துரியோதனனுடைய சேனைவலிமையும் என்னுடைய விசாலமாகியபுஜவலிமையும் பார்க்கலாமென்று பின்னுஞ் சொல்லுவான் நகுலனென்றவாறு. (உஎ)

அன்னநடையரம்பைதனையவுணர்கவர்ந் திடவிடையோ ரரசுக்
காக, முன்னமவருடன்பொருதுசிறைமீட்டா னங்குலத்துமு
தல்வனன்றோ-மன்னனவையில்யாங்காணமடவரலைத்துகிலுரிந்த
வலியோன்றன்பால் - இன்னமிரந்தவன்குடைக்கீழிருந்தக்கா
னம்மையுலகென்சொலாதோ............ .... . . ...........*

(எ-து) அன்னம்போல்நடையையுடைய தேவரம்பையையசுரர்கள் பிடித்துக்கொண்டுபோக அப்போது அவள்பயந்து கூப்பிடுவதுதெரிந்து இந்திரன்பொருட்டுமுற்காலத்திலே அந்தஅசுரருடனே யுத்தஞ்செய்துசிறைமீட்டவன் நம்முடையகுலத்துத் தலைவனாகிய புரூரவசக்கிரவர்த்தியல்லவா இராஜசபையிலேநாம்காணும்படிக்குத் துரோபதியை அபிமானபங்கஞ்செய்த வலிமையையுடைய துரியோதனனிடத்தில் இன்னம்யாசித்து அவன் குடைநிழலிலிருந்தால் நம்மையுலகம் என்சொல்லாதென்று பின்னுஞ்சொல்லுவான் நகுலனென்றவாறு. (உஅ)

கானெறிபோய்க்கரந்துறைந்து கடவநாட்கழித்ததற்பின்கான
நீங்கி - ஈனமிலாவகைவந்தார் நந்துணைவரெனச் சிறிதுமிரங்
கானாகில் - மாநகரும்வளநாடு முரிமையுந்தன் மொழிப்படி
யேவழங்கானாகில் - தானறியாதவன்பிறர்போய்க் கற்பித்தாலறி
வனோதரணிவேந்தே.......................... ...........*

(எ-து) வனவாசம்பன்னிரண்டுவருஷமும் அக்யாதவாசமொருவருஷமும் இருந்து கழித்தபிற்பாடு காட்டைவிட்டு ஈனமில்லாதபடிவந்தார்கள் நம்முடைய அண்ணன் தம்பிமார்களென்று கொஞ்சமுமிரக்கஞ்செய்யானாகில் தாயாதிபக்ஷமுண்டான மகத்தாகியநகரமும் வளத்தையுடையநாடும் மற்றப்பங்குந் தன்சொல்லின்படியே

கொடாமற்போனுனாகில் தானே அறியாதவன் ஒருவர்போய்ச்சொ ன்னு லறிவனே பூமிக்கரசனாகியதருமபுத்திரரேயென்றான் நகுலன்.

நகுலனிவையெடுத்துரைப்ப நன்றெனக்கையமைத்தருளிநகு
லன்சொல்லு - மிகல்விசயன்றன்மொழியுந் திறல்வீமனியம்பி
யதும்யாவுங்கேட்டோம் - புகலரியவுணர்வுடையோய் புகழு
டையோய்திறலுடையோய்புகனீயென்ன - முகிலனையதிருமே
னிமுகுந்தனுக்குமனமுருகமொழிகின்றனே.............*

(எ-து) நகுலனிந்தவசனஞ்சொல்ல நல்லதென்றுகையமைத் தருளி நகுலன்சொன்னதும் வலிமையுடைய அர்ச்சுனன் சொன்ன தும்சௌரியத்தையுடையவீமசேனன்சொன்னதும் எல்லாங்கேள்வி ப்பட்டோம் சொல்லுதற்கரிய வறிவையுடையவனே கீர்த்தியையுடை யவனே சௌரியத்தையுடையவனே யுன்கருத்தை நீ சொல்லலென்று கேட்கக்கரியமேகத்தையொத்ததிருமேனியையுடைய ஸ்ரீகிஷ்ணதே வனைப்பார்த்து மனமுருகும்படிச் சொல்லுவான் சகாதேவனென் றவாறு. (௧௰)

சிந்தித்தபடி நீயுஞ் சென்றாலென்றவிர்ந்தாலென்செறிந்தநூறு
மைந்தர்க்குமுதல்வனிலம் வழங்காமலிருந்தாலென் வழங்கினு
லென் - கொந்துற்றகுழலிவளு முடித்தாலென்விரித்தாலென்
குறித்தசெய்கை - யந்தத்தின் முடியும்வகை யடியேற்குத்தெ
ரியுமோவாதிமூர்த்தி...................................*

(எ-து) ஆதிநாராயணராகிய ஸ்ரீகிருஷ்ணதேவரே நீர்நினைத்த படியே தூதுபோனுலென்ன அதைவிட்டாலென்ன துரியோதனன் பூமிகொடாவிட்டாலென்ன கொடுத்தாலென்ன பூங்கொத்தையுடைய அளகபாரத்தை இத்துரோபதிமுடித்தாலென்ன விரித்தாலென்ன - நினைத்தகாரிய முடிவிலே முடியும்விதம் அடியேனுக்குத் தெரியு மோவென்றான் சகாதேவனென்றவாறு. (௧௧)

முருகவிழ்க்கும்பசுந்துளபமுடியோனேயன்றலகைமுலைப்பா
லுண்டு - மருதிடைச்சென்றுயர்சகடம் விழவுதைத்துப் பொ
திவர்மனைவளர்ந்தமாலே - ஒருவருக்குந்தெரியாதிந்துன்மாய
கையானிவேனுண்மையாகத் - திருவுளத்துக்கருத்தெதுவோ
வதுவெனக்குங்கருத்தென்றான் றெய்வமன்னன்,.............*

(எ-து) வாசனையைவீசுகின்ற பசியதுளபமாலையணிந்தகிரீடத்தையுடையவரே அன்று பூதகியினுடைய முலைப்பாலையுண்டு சாபம்பெற்றிருந்த மருதமரத்தையுதைத்துஉயர்ந்தபண்டியை விழும்படியுதைத்து யாதவர்மனையில் வளர்ந்தருளிய ஸ்ரீகிருஷ்ணதேவரேஇங்கேநீர்செய்கின்றமாயம் ஒருவருக்குந்தெரியாது எனக்குத்தெரியுமாகையால் சத்தியமாக உம்முடையதிருவுளத்துக்குநினைப்பு எதுவோ அதுவேயெனக்குங்கருத்தென்றான் தெய்வத்தையொத்த சகாதேவனென்றவாறு. (௧௨)

இவ்வண்ணஞ்சாதேவனியம்புதலு நகைத்தருளியிகலோர்சொன்ன - வவ்வண்ணம்புகலாமல் விரகுரைத்தானிவனென்னவவனுடனாங்கோர் - மைவண்ணமணிக்கூடந்தனிலெய்திப்பாரதப்போர்பயிலாவண்ணம் - மெய்வண்ணஞ்சொல்லுகநீயுபாயமெனத்தொழுதுரைத்தானுரங்கொள்வேலான்.......................*

(எ-து) இந்தப்பிரகாரஞ் சாதேவன்சொன்னமாத்திரத்திலே ஸ்ரீகிருஷ்ணதேவர் புன்சிரிப்புக்கொண்டு தருமபுத்திராதியர் சொன்ன அவ்விதஞ்சொல்லாமல் இவன் உபாயமாகச்சொன்னானென்று அவனுடனே அங்கேநாகரத்நத்தினு விழைக்கப்பட்டிருக்கிற ஒருஏகாந்தஸ்தானத்திலேபோய் இந்தப்பாரதயுத்தஞ் செய்யாதவிதம்பிழைக்கும்படி நீ உபாயஞ்சொல்லென்றுகேட்க அவரைவணங்கிச்சொல்லுவான் சகாதேவனென்றவா. (௧௩)

(வேறு.)

நீபாரதவமரில்யாவரையுநீறுக்கிப்..... .........*
பூபாரந்தீர்க்கப்புரிந்தாய்புயல்வண்ணு ........*
கோபாலாபோரேறே கோவிந்தா நீயன்றி........*
மாபாரதமகற்றமாற்றூர்சொல்வல்லாரே.........*

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவரே நீர் பாரதயுத்தத்திலே சர்வதேசத்துஇராஜவர்க்கத்தையுங் குருக்ஷேத்திரத்திலேகூட்டிச் சாம்பலாக்கிப்பூமிபாரந்தீர்க்க இந்தஎத்தனஞ்செய்தீர் மேகவண்ணரே பசுக்களைப்பரிபாலநஞ்செய்தவரே யுத்தத்துக்கு ஆண்சிங்கம் போன்றவரேகோவிந்தரே உம்மையல்லாமல் இந்தமகாபாரதத்தை நீக்கவல்லவர்வேறேயாரிருக்கிறூர்கள்சொல்லுமென்றுபின்னுஞ்சொல்லுவான்சாதேவனென்றவாறு. (௧௪)

பாராளக்கன்னனிகல்பார்த்தனைமுன்கொன்றணங்கின் *
காரார்குழல்களைந்து காலிற்றலைபூட்டி............... *
நேராகக்கைபிடித்து நின்னையும்யான்கட்டுவனேல்.....*
வாராமற்காக்கலா மாபாரதமென்றான்............ .....*

(எ-து) கர்னனைப்பூமியாளும்படிப் பட்டங்கட்டி அவனைச்கொல் விகிறோமென்று பகைத்திருக்கின்ற அர்ச்சுனனை முன்னேகொன்று திரௌபதையினுடைய கூந்தலைக்களைவித்துச்காலிலேவிலங்குபூட்டிநேராகக்கையாற்பிடித்து உம்மையும்நான்கட்டுவனேயானால் இந்தமகாபாரதயுத்தம் வராமற்படிக்குக்காக்கலாமென்றான் சகாதேவனென்றவாறு. (௧௫)

முன்னநீகூறியவையெல்லாமுடித்தாலும்...............*
என்னைநீகட்டுமாறெவ்வாறென்மாயன்........ ....... ..*
னுன்னைநீதானுமுணராதாயுன்வடிவந்.. ...............*
தன்னைநீகாட்டத்தளைந்திடுவேன்யானென்றான்........*

(எ-து) முன்னேநீசொன்னபடி அவைகளெல்லாஞ்செய்துமுடித்தாலும் என்னை நீ பிடித்துக்கட்டும்விதம் எப்படியென்று கேட்கஉம் முடையபெருமையையறியாத நீர் உம்முடைய வடிவைக்காட்டினால் நான் கட்டுவேனென்றான் சகாதேவனென்றவாறு. (௧௬)

மாயவனுமன்பன் மனமறிவான்கட்டுகவென்...........*
றாயவடிவுபதினாயிரங்கொண்டான்.......... .........*
தூயவனுமூலமாந்தோற்றமுணர்ந்தெவ்வுலகுந்... ...*
தாயவடியிணைகடன்கருத்தினாற்பிணித்தான்........ ...ற

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவரும் அன்பனுடையமனமறியும்படிநம்மைக்கட்டும்பிள்ளாயென்று தமதிச்சையினாலாகியபதினாயிரம்வடிவுகொண்டார், பரிசுத்தனாகிய சகாதேவனும் அவ்வடிவுகளுக்கெல்லாம் ஆதிபாகியவடிவை ஞானத்தாலறிந்துஎந்தவுலகத்தையுந்தாவியளந்த இரண்டுபாதங்களையுந்தன்கருத்தாகிய கயிற்றினாலேகட்டினானென்றவாறு. (௧௭)

நீதேவனென்றறிந்து நெஞ்சாற்றனைக்கட்டுஞ்....... *
சாதேவன்கண்களிக்கத்தானேயாமுன்னின்றான்... ...*

பூதேவருங்கனகப் பூங்காநிழல்வைகும் ................*
மாதேவருந்தேடிக்காணுமலடியோன்..................*

(எ-து) பதினாறுயிரம்வடிவிலே மூலமாகியவடிவையறிந்துநீதா ன்தேவனென்று நிச்சயித்து மனதினாலே தன்னைக்காட்டியசகாதேவ னுடைய கண்கள்களிக்கும்படித் தானேயாகிப்பிரத்தியக்ஷமாய்நின் றார் பூலோகத்துத்தேவரும் பொன்மயமாகியமலர்களையுடையபஞ்ச தருவினிழலிலே தங்கிய பெருமைபொருந்திய தேவர்களுந்தேடிக் காணாததாமரைமலரையொத்த பாதங்களையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவ னென்றவாறு. (௫அ)

அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தமைந்தா........*
வென்பாதந்தன்னையினிநீவிடுகவென..... ..... .....*
வன்பாரதப்போரில்வந்தடைந்தவைவரையும்........ .*
நின்பார்வையாற்காக்க வேண்டுநெடுமாலே..........*

(எ-து) பத்தியினாலே இன்றுஎன்னையறிந்துகட்டியபிள்ளாய் என் னுடையபாதத்தை இனிநீவிடக்கடவாயென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்ல, வன்மைபொருந்திய பாரதயுத்தத்திலேவந்து சேர்ந்தஎங்க ளைவரையும் உம்முடைய கடாக்ஷத்தினாலே ரக்ஷணைசெய்யவேண்டும் நெடியமகாவிஷ்ணுவேயென்றான் சகாதேவனென்றவாறு. (௫௯)

என்றென்றிறைஞ்சி யிருதாமரைத்தாளி........... ...*
லொன்றுங்கதிர்முடியாற் கோமென்றுரைத்தருளி.....*
யின்றிங்கிருவேமுமிப்போதுரைத்தமொழி... ... .....*
யொன்றும்பிறரறிய வோதாதொழிகின்றான்...... ...*

(எ-து) இம்படியென்று சொல்லிவணங்கிஇரண்டு தாமரையலர் போன்றபாதங்களில் நமஸ்கரித்த சகாதேவனுக்கு நிச்சயஞ்சொல் லிஇன்று நாமிரண்டுபேரும் இப்போது பேசியசொல்லொன்றும்அ ன்னியரறியச்சொல்லாதேயென்றார்ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு *

ஆண்டிருந்தவவைநீங்கியறிவுடையோரிருவோரும்.... *
பாண்டவர்கண்முன்னெய்தப் பழுதில்புகழ்ப்பாஞ்சாலி
நீண்டகருங்குழல்சோர நின்றாளைமுகநோக்கி.........*
ஈண்டவரிலிளையோனிச்சந்தமிகவின்தெல்றான்... ..*

(எ-து) அவ்விடத்தேயிருந்தசபையினின்றும் நீங்கி யறிவுடைய அவ்விரண்டுபேரும் தருமபுத்திரர்முதலானோரிருக்கிற சபைக்குவர அப்போது குற்றமற்றகீர்த்தியையுடைய துரோபதியானவள் நெடியகருமைபொருந்திய அளகபாரஞ்சோரநின்றாள் அவள்முகத்தைப் பார்த்துஸ்ரீகிருஷ்ணதேவருக்கிளையவராகிய சாத்தகியாழ்வார்இந்தச் சமயம்நல்லதுநீகேட்கவேண்டியவைகளைக்கேளென்றானென்றவாறு.

தருமனுக்குங்கருத்திதுவேதமருடன்போர்புரியாம...*
விருநிலத்திலுடன்வாழ்தலிவர்க்குநினைவென்றுரைத்து *
வரிமலர்க்கண்புனல்சோரமலர்மறந்தகுழல்சோர.....*
விரிமலர்ச்செஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தழுதாள்மின்னனையாள்

(எ-து) சாத்தகியாழ்வார்சொன்னவசனங்கேட்டுஞாதிகளுடனே யுத்தஞ்செய்யாமல் பெருமைபொருந்திய பூமியிலே கூடிவாழ்வே தருமபுத்திரருக்குங்கருத்து இந்தச்சகாதேவர்க்கும்இதுவேகருத்தென்றுசொல்லி ரேகைகளையுடைய நீலோற்பலமலரையொத்தகண்களிலேநீரொழுகப்பூமுடித்தலைமறந்த அளகபாரமுஞ்சோர்வையடைய என்னுடையபிரதிக்கினை எவ்விதத்தில்முடியுமென்றுஸ்ரீகிருஷ்ணதேவருடைய விரிந்ததாமரைமலரையொத்த சிவந்ததிருவடியிலேவிழுந்துப்பிரலாபித்தாள்மின்னலையொத்தவடிவையுடையதுரோபதி.

சாலக்கனகன்றனிமைந்தனைமுனிந்த...... ......*
காலத்தவனறைந்தகற்றூணிடைவந்தாய்... ......*
மூலப்பேரிட்டழைத்தமும்மதமால்யானைக்கு...*
நீலக்கிரிபோன்முனின்றநெடுமாலே...... ......*

(எ-து) ஆதிநாராயணன் எங்கேயிருக்கிறான் இந்தத் தூணிலுமிருப்பானோசொல்லடாவென்று தன்னுடைய ஒப்பற்றகுமாரனாகிய பிரகலாதனனை மிகவும் இரணியனானவன்கோபித்தகாலத்திலே அவனாலறையப்பட்ட கற்றூணிலேநரசிங்கஉருவங்கொண்டுவந்தாய் ஆதிமூலமேயென்று பெயரிட்டழைத்த மும்மதங்களையும் பொழிகின்ற பெரியயானைக்கு நீலகிரிபோல எதிரே எழுந்தளிவந்த நெடிய மகாவிஷ்ணுவேயென்றாள் துரோபதியென்றவாறு. (சா)

கற்றைக்குழல்பிடித்துக் கண்ணிலான்பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப்பாண்டவரும்பார்த்திருந்தார்... ...*

சொற்றத்தனித்திகிரிக்கோவிந்தாநீயன்றி ......... ...*
அற்றைக்குமென்மானமார்வேறுகாத்தாரோ.............*

(எ-து) கற்றைபாகிய என்னுடைய அளகபாரத்தைப் பிடித்துத் திருதராட்டிரன்பெற்றகுமாரனாகிய துற்சாதனன் அபிமானபங்கமாகஎன்னுடைய துகிலைப்பற்றி உரியும்போது பஞ்சபாண்டவரும்பார்த்திருந்தார்கள் வெற்றிபொருந்திய ஒப்பற்றசக்கிராயுதத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரே உம்மையல்லாமல் அன்றைக்கும் என்மானத்தை வேறேபார்வந்து காத்தார்களென்று பின்னுஞ்சொல்லுவாள் துரோபதியென்றவாறு. (சச)

மன்றிலழைத்தெனக்குமாசளித்தமன்னவன்பாற்......*
சென்றுதமக்கைந்தூர்திறல்வீரர்பெற்றிருந்தால்.......*
அன்றுவிரித்தவருங்கூந்தல்வல்வினையேன்..............*
என்றுமுடிப்பதினியெம்பெருமவென்றழுதாள் ... ..*

(எ-து) சபையிலேயழைத்து எனக்குக் குற்றத்தைத் தந்த துரியோதனனிடத்தில்போய்ச் சுத்தவீரராகிய பஞ்சபாண்டவர்தமக்கு ஐந்தூர்பெற்றிருப்பார்களேயாகில் அன்றுவிரித்த அரிய அளகபாரத்தைத்தீவினையையுடைய அடியேன் என்றைக்கு இனி முடிப்பது எமதுகடவுளேஎன்றழுதாள் துரோபதியென்றவாறு. (சரு)

தண்டிருந்தவன்கரத்திற்றனுவிருந்ததிவன்கரத்தில்...*
வண்டிருந்தபூங்குழன்மேன் மாசிருந்ததெனவிருந்தாள்
கண்டிருந்தீரொல்லீருங் கருதலர்பாலூர்வேண்டி........*
யுண்டிருந்துவாழ்வதற்கேயுணர்கின்றீருரையீரோ..... *

(எ-து) அந்தவீமசேனன்கையில்தண்டாயுதமிருந்தது, இந்தஅர்ச்சுனன்கையில்காண்டீபமென்னும் வில்லிருந்தது, இந்தத்துரோபதியோ வண்டுகள்மொய்த்திருக்கின்ற பூவையணிந்த கூந்தலின்மேல் மாசேறியிருந்ததென்னும்படியிருந்தனள். நீங்களெல்லோரும்பார்த்திருந்தீர்கள், சத்துருக்களிடத்திலேஊர்வேண்டிப்பெற்றுக்கொண்டுபுசித்து உயிர்வாழ்வதற்கு நினைக்கின்றவர்களே! இதற்கு உத்திரவுசொல்லுங்களென்றார் சாத்தகியாழ்வாரென்றவாறு; (சசு)

சண்டமுகிலுருமனையசராசந்தன்றனக்கஞ்சி...... ...*
வண்டுவரையரணாகவடமதுரைவிட்ட:...............*

திண்டிறன்மாதவன்மதியோ நிகழ்தருமன்றன்மதியோ *
பண்டுமவர்கருத்தறிந்து பார்போய்வேணுமெனமெதன்முன்.

(எ-து) வேகத்தையுடைய பிரளயகாலத்து இடியையொத்த சரா சந்தனென்னும் அரசனுக்குப்பயந்து வளப்பத்தையுடைய துவார கையைக்கோட்டையாகக்கொண்டு வடமதுரையென்னும்பட்டணத் தைக்கைவிட்டவலிய்சௌரியத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவருடைய புத்தியோபிரகாசத்தையுடைய தருமபுத்திரருடைய புத்தியோமுன் னதாகஅவர்கருத்துத்தெரிந்திருந்தும்போய்ப்பூமியைவேண்டுவதுஎ ன்னென்றார்சாத்தகியாழ்வாரென்றவாறு. (சஎ)

சாத்தகிநின்றிவையுரைப்பச் சடைக்குழலாளழுதரற்றக்
கோத்தருமன்முதலாயகுலவேந்தரைவரையும்..........*
பார்த்தருளியருள்பொழியும்பங்கயக்கணெடுமாலும் *
ஏத்தரியபெருங்கற்பினிளையாளுக்கிவையுரைத்தான் *

(எ-து) சாத்தகியாழ்வாரெழுந்துநின்று இந்தவசனஞ்சொல்லச் சடைபட்ட கூந்தலையுடைய துரோபதி பிரலாபித்துப்புலம்ப அப் போது தருமபுத்திரர்முதலாகிய ஐவரையும் பார்த்தருளிக்கிருபை யைப்பொழிகின்றதாமரைக்கண்ணராகிய ஸ்ரீகிருஷ்ணதேவருந்துதி செய்தற்கரியபெரியபாதிவிர்த்தியத்தையுடையதங்கையாகியதுரோ பதிக்கு இவைகளை யருளிச்செய்தாரென்றவாறு. (சஅ)

தொல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற் பின், னல்லாயுன்பைங்கூந்தனுனேமுடிக்கின்றேற... ... *
னெல்லாருங்காணவினிவிரிப்பதெண்ணரிய.......... *
புல்லார்தமத்தப்புரமாதர் பூங்குழலே... .......... ...*

(எ-து)பழமையாகியசௌரியத்தையுடைய பஞ்சபாண்டவர்க்கா கத்தூதுபோய்வந்தவுடனே துரோபதையே உன்னுடையபசியகூந்த லைநானேமுடிப்பேன் எல்லாரும் பார்க்கும்படி இனிவிரிக்கப்படுவ தெண்ணிக்கையற்றசத்துருக்களுடைய அந்தப்புரத்திலிருக்கின்றஸ் திரீகளுடையபூவையணிந்தகூந்தலென்றவாறு. (சகூ)

மைக்குழலாய்கேளாய்மருவாருடற்புலத்துப்...... ...*
புக்குழலாருங்கொழுவாம்போர்வாளபிமன்னன்... ...*

ளெருக்குழலும்வெங்கோன்மைத்தொல்வேந்தர்தங்குலமு
மிக்குழலுஞ்சேரமுடியாதிரானென்றான்...............*

(எ-து.) கரியகூந்தலையுடைய துரோபதியே கேட்பாயாக சத்துருக்களுடையதேகங்களாகியவயலிலேபுகுந்துஉழுதற்குஆகின்றகொழுப்படையென்றுசொல்லலாகும் யுத்தஞ்செய்கின்றவாளாயுதத்தையுடைய அபிமன்னனுணவன் ஒன்றாகக்கூடியுழுகின்ற கொடுங்கோலின்றன்மையையுடையபழைய அரசர்களுடையகுலங்களையும் உன்னுடையஅளகபாரத்தையும் ஒருசேரமுடியாமல்விடானென்றுபின்னுஞ்சொல்லுவார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௫௰)

துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்...... ......*
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ...............*
ரொன்றுமுறைமையுணராதவர்மகளீ.................. ...*
ரொன்றுமிவர்மந்தணத்திலெய்தப்பெறாரே...... ..*

(எ-து.) வியாதியையுடையவர்கள் துறந்தமகத்துக்கள் ஒருவருக்குமடங்காதவர்கள் கன்றியகோபம்பொருந்திய மனமுடையவர்கள் கல்வியில்லாதவர்கள் சிறுபிள்ளைகள் பொருந்திய நீதியறியாதவர்கள் பெண்பிள்ளைகள் என்று சொல்லுகின்ற இவர்கள்ரகசியம் பேசுமிடத்தில் அடையப்பெறாதவர்களென்றவாறு. (௫௧)

பெண்ணீர்மைகுன்றாப்பெருந்திருவின்செங்கமலக்... *
கண்ணீர்துடைத்தருளிக்கண்ணிற்கருணையெனு ந்......*
தெண்ணீரினாற்பொருந்தத்தேற்றினன்சாற்றுகின்ற...*
மண்ணீரனலனிலம்வான்வடிவாமாமாயன்... ... ......*

(எ-து.) பெண்கட்குவேண்டிய சிறந்தகுணங்களிற்குறைவில்லாத துரோபதியினுடைய செந்தாமரைமலர்போன்ற கண்களிலிருந்து வருகின்ற நீரைத்துடைத்தருளித் தம்முடையகண்களிலிருக்குங்கிருபையென்கின்றதெளிந்தநீரினாலே பொருந்தும்படி தெளியச்செய்தார் சொல்லுகின்ற பஞ்சபூதவடிவமாகிய பெருமைபொருந்திய ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௫௨)

என்னக்கழறியிருந்தோனுரைதவிர்த்து............ ......*
நின்னொப்பவரில்லாய் நீயேகெனவுரைப்ப,.. .........*

மன்னர்க்குமன்னவன்பான்மாயோனுந்தூதாகிப்.....*
பொன்னுற்றநேமிப்பொருபரித்தேர்மேற்கொண்டான்-

(எ-து) இப்படி உறுதியாகச்சொல்லியிருந்தஸ்ரீகிருஷ்ணதேவரு டைய வசனங்களை நீக்கி உமக்குச்சமான மொருவருமில்லாததேவரீ ரோ தூதுபோகவேண்டுமென்று பஞ்சபாண்டவர்கள்சொல்ல அரச ர்க்கரசனாகிய துரியோதனனிடத்திலே ஸ்ரீகிருஷ்ணதேவருந் தூதாகி மகாமேருமலைக்குச் சமானமாகிய குதிரைகள்கட்டியதேரின்மேலே றிக்கொண்டாரென்றவாறு. (௫௩)

சங்குமணிமுரசுஞ்சல்லரியுந்தாரைகளு........ ......*
மெங்குமுழங்கவெழில்வெண்குடைநிழற்ற... .. ......*
பொங்குகவரிபுடையிரட்டவெண்ணிலா ... ...... ....*
அங்கமொருநான்குமவணிபருந்தற்சூழ ............... *

(எ-து) அப்போது சங்கவர்க்கங்களும்அழகியபேரிகைகளுஞ்சல் லரிகளும் தாரைகளும் எவ்விடத்திலுஞ்சத்திக்கஅழகிய வெள்ளைக்கு டைநிழலைச்செய்ய பிரகாசம் பொருந்தியசாமரைகள்இரண்டுபக்கங் களிலும் வீசிவரகணக்கில்லாத ரதகஜதுரகபதாதிகளும் பூமியையா ளும் அரசர்களுந் தன்னைச்சூழ்ந்துவரப்புறப்பட்டார்ஸ்ரீகிருஷ்ணதே வரென்றவாறு. (௫௪)

கல்வரையும்பாலைக்கடுஞ்சுரமுங்கான்யாறும்...........*
நல்வரையுநீர்நாடு நாளிரண்டிற்சென்றருளித்...........*
தொல்வரையகோபுரமுந் நீண்மதிலுஞ்சூழ்ந்திலங்கு...*
மல்வரையதோளான் வளமாநகர்கண்டான்.............*

(எ-து) மணியாம் பருக்கைகளைக் கொண்டிருக்கின்ற பாலையென் னுங்கடியசுரங்களும்காநாறும் நல்மலைகளும் நீரையுடையநாடுகளு ம்இரண்டுநாளிற்கடந்துபோய் முற்காலத்திலே இவ்வளவென்றுசொ ல்லிய அளவையுடைய கோபுரங்களும் நெடியமதிலுஞ்சூழ்ந்துவிளங் குகின்றமல்லுத்தஞ்செய்கின்ற மலைக்குச்சமானமாகியதோளையுடை ய ஸ்ரீகிருஷ்ணதேவர் வளப்பத்தையுடையபெரியநகரத்தைக்கண்டா ரென்றவாறு. (௫௫)

(வேறு.)

மேவுசெந்துகிர்த்திரளுமாமரகதவிதமுந்.................*
கோவைவெண்கதிர்த் தரளமுநிரைநிரைகுயிற்றித் .. ..*
தாவும்வெம்பரித்தேரினனைக்கெதிர்சமைத்த... ...*
காவணங்களிற்றோன் றினபச்சிளங்கமுகு.............*

(எ-று) அந்த மார்க்கத்திலே பசுமையும் இளமையும் பொருந்தியகமுகுகள் பழுத்தகுலையும் பச்சைக்குலையும் பாளைகளும்விளங்கியதெப்படியிருக்கிறதென்றால் சிவந்தநிறத்தையுடைய பவளங்களும் வெவ்வேறு விதமாகியமரகதங்களும்கோவைசெய்தவெள்ளியகிரணத்தையுடைய முத்துகளும் வரிசைவரிசையாகப் பதித்துத்தாவிநடக்கும்வெவ்வியகுதிரைகள் கட்டியதேரையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவருக்கு எதிரேயுண்டாக்கியமண்டபங்கள்போலிருந்தனவென்றவாறு (௫௬

வம்புலாமகிற்சந்தனம்வருக்கைமாகந்தஞ்......... ...*
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்கி......... ...*
யும்பர்நாயகன் வரவுகண்டுளங்களிகூர்ந்து... ..........*
தும்பிபாடினதோகைநின்றாடினசோலை...............*

(எ-று) பரிமளம்வீசிய அகிலும்சந்தனமும் பலாவும்மாவும்சண்பகமும பச்சிலைமரமும் எந்தத்திசைகளிலுந் தங்கியிருக்கப்பெற்றசோலையில் தேவநாயகனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவர்வருதலைக்கண்டுமனமகிழ்ச்சியடைந்துவண்டுகள்பாடின மயில்கள்நின்று கூத்தாடினவென்றவாறு. (௫௭)

அணிகொள்த்திருபுரியெனுமணங்குசெந்திருவின்..... *
கணவனுக்கெதிர்காட்டுநீராசனங்கடுப்ப............. ...*
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்த.. ...... ...*
புணரியிற்பெரும்புனலையுங்கொள்வனபொய்கை... ..:*

(எ-று) அழகினைக்கொண்டஅத்திருபுரியென்னுமொருகன்னிகைமகாலட்சுமிக்குநாயகனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவருக்கு எதிரேகாட்டுகின்ற ஆலத்திக்கொப்பாக வாசனைமிகுந்த சிவந்ததாமரைமலருடனேசிறந்தகடல்போல் நிறைந்த நீரையுங்கொண்டிருந்தன பொய்கைகளென்றவாறு. (௫௮)

நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால ......... *
மிடந்தநாளினிலதுவழியாகவந்தெழுந்து... ......... *
படர்ந்தபாதலக்கங்கைபப்படர்மதில்சூழ்ந்து...... ...*
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு... ......*

(எ - து) தூதுநடந்த ஸ்ரீகிருஷ்ணதேவர்பூருவத்திலே வராகரூபியாய்ச் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப்பேர்த்தநாளில் அதுவழியாகவந்தெழுந்துபரவியபாதாளகங்கை அந்தநகரின் பெரியமதிலைவளைந்துகிடந்ததென் றுசொல்லச்சிறந்திருந்ததுதாழ்ந்தநீரையுடைய அகழியென்றவாறு. (ருசு)

அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்தும் ............*
முடிநிலத்தினுக்குபெதத்தினுமுடிவில்லை ..... ......*
நெடியசக்கரப்பொருப்பையுநிகரிலாவிதற்கோர்.....*
படிவகுத்ததாமெனும்படிபரந்ததுபுரிசை........... *

(எ - து) கீழ்நிலத்திலே படிவனவாகும் இடையையுடைய மேகங்களெல்லாம் அதினுடையமேல்நிலத்துக்குநக்ஷத்திரபதவியிலுமுடிவில்லை, நீண்டசக்கிரவாளகிரியையும் நிகரில்லாதவிதற்கு ஒருபுடையொப்பாகச் செய்ததாமென் றுசொல்லும்படி பரந்திருந்ததுஅந்த அல்திறுபுரத்துமதிலென்றவாறு. (ருஎ)

பகலினுங்கடும்பரிதிதன்கதிர்பரப்பாம ................*
விகலியெங்கணுமெறிந்தகால்பொருதவினேத்திப்.....*
புகலுகின்றமந்தாகினித்தரங்கமேம்பால......... ......*
வகல்விசும்பிடைமிடைவனநெடுங்கொடியாடை.. ... *

(எ - து) பகற்காலத்திலும் வேகத்தையுடைய சூரியன் தன்கிரணங்களைவீசாமலிருக்கும்படி வலிமைகொண்டு எவ்விடத்தும் வீசுகின்றகாற்றுப்பொருகிறபடியால் உயர்வாகச்சொல்லுகின்ற கங்கையினுடைய அலைகள்போல் அகன்ற ஆகாசத்தினிடத்திலே நெருங்குவன நெடியகொடியாகக்கட்டிய வஸ்திரங்களென்றவாறு. (ருஅ)

புயங்கபூமியோபுரந்தரற்கமைத்தபொன்னுலகோ.. *
தயங்குசெல்வநீடளகையோநகரெனச்சாற்ற... ... ...*
வியங்குகார்முகில்வரையினின்றெழுவனபோல.........*
வயங்குகாரகினறும்புகையுமிர்ப்பனமாடம்...........*

(எ - து) நாகலோகமோ? இந்திரனுக்குச்செய்த பொன்மயமான தெய்வலோகமோ? செல்வமிகுந்த அளகாபுரியோ? இந்தநகரொன்று சொல்லச்சஞ்சரிக்கின்றகரியமேகங்கள்மலைகளின் மேலேநின்று எழு தல்போல பிரகாசிக்கின்றகரியஅகிலினதுநறியவாகியபுகைகளை வீசு கின்றனமாளிகைகளென்றவாறு. (௬௨)

மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரொதிர்மயங்கப்...... *
பின்னுமுன்னுமெம்மருங்கினும்பெயரிடம்பெருமற் *
றன்னிநின்றவரோகுமிினகுமினெனுஞ்சொ...... ...*
லென்னுமோசையெயுள்ளனவீதிகளெல்லாம்...... ...*

(எ - து) அரசர்களுடைய யானைகளுஞ்சேனைகளும் ஒன்றுக்கொ ன்று எதிரிட்டுமயங்கப் பின்னுமுன்னும் எந்தப்பக்கத்திலும்காலைத் தூக்கிவைத்துப்போக இடம்பெறமாட்டாமல் நெருங்கிநின்றவர்கள் போங்கோள் போங்கோளென்னுஞ் சொல்லினுடைய சத்தங்களை யுண்டாயிருக்கின்றன வீதிகளெல்லாமென்றவாறு. (௬௩)

வரையெலாம்பலவனமெலாங்கடலெலாம்விளைந்த .....*
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்த... *
நிரையெலாங்கவராவணநீர்மையைப்புலவோ........ ...*
ருரையெலாந்தொடுத்துரைப்பினு முவமைவேறுளதோ

(எ - து) மலைகளெல்லாவற்றினும்உண்டாகின்ற மாணிக்கமுதலிய திரவியமும், காடுகளெல்லாவற்றினும்உண்டாகின்றசந்தனமுதலியதி ரவியமும், கடல்களெல்லாவற்றினும்உண்டாகின்றசங்குமுதலிய திர வியமும், நாடுகளெல்லாவற்றினும்உண்டாகின்றசெந்நெல்முதலிய திரவியமும், வெவ்வேறுசக்குவித்து வரிசையாகவைக்கப்பெற்றக டைவீதியினுடைய குணத்தை வித்துவான்கள் கற்றசொல்லுகளெல் லாமெடுத்துச்சொன்னாலும்வேறேஉபமானமுண்டோவென்றவாறு

விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்...... .......*
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி......... *
யிரவில்வானமீனினும்பலயானையினீட்ட...... .......*
நிரைகொள்கார்த்துளியினும்பலதேரணிநிலையே...... *

(எ - து)காட்டிலிருக்கின்றபலமலர்களைக்காட்டிலுஞ்சுத்தவீரர்களதி கமாக இருப்பார்கள், சமுத்திரத்தினுடைய வெள்ளைமணலைக்காட்டி

லுங்குதிரைபந்திகளதிகமாகஇருக்கும், இராத்திரியில் ஆகாசத்திலே
தோன்றும், நக்ஷத்திரங்களைக்காட்டிலும் யானைக்கூட்டங்களதிகமா
கஇருக்கும், வரிசையாகிய மேகதாரைகளைக்காட்டிலும் இரதங்கள
திகமாகஇருக்குமென்றவாறு. (சுரு)

ஆசிலாமறையந்தணராலயமொருபால்... ......*
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபால்......*
காசிலாமதியமைச்சர்தங்கடிமனையொருபால்...*
பேசிலாவொழில்வணிகர்தம்பேரிடமொருபால்... *

(எ-து) குற்றமில்லாதநான்குவேதமுந்தெரிந்தபிராமணர்திருமா
ளிகைகளொருபக்கத்திலிருக்கும், களங்கமில்லாதகிரீடந்தரித்த அர
சர் அரமனைகளொருபக்கத்திலிருக்கும், பழுதில்லாத புத்தியின்மிகு
ந்தமந்திரிகளுடையபுதுமைபொருந்தியவீடுகளொருபக்கத்திலிருக்
கும், சொல்லுமிடத்தில்நிறைந்தஅழகையுடைய வைசியருடையஇட
மகன்றவீடுகளொருபக்கத்திலிருக்குமென்றவாறு. (சுசு)

மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோசை....... ...*
திங்கடோய்நெடுந்தலமெலாஞ்செழுஞ்சிலம்போசை *
யங்கண்மாநகரனைத்துமும்முரசதிரோசை............*
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோசை... ......*

(எ-து) கல்யாணஞ்செய்கின்றவீடுகளெல்லாம்வலம்புரியென்னு
ஞ்சங்கத்தொனியாயிருக்கும், சந்திரன்தோய்கின்றநெடியநிருத்தர
ங்கமெல்லாம் நடனஞ்செய்கின்றமாதருடையசெழுமைபொருந்திய
சிலம்போசையாயிருக்கும், அழகியஇடத்தையுடையமகத்தாகியநக
ரமுழுதும் வெற்றிமுரசு வீரமுரசு தியாகமுரசென்றும் மூவிதப்
பேரிகையோசையாயிருக்கும், எவ்விடத்திலுந் தேவாலயந்தோறு
மத்தளவோசையாயிருக்குமென்றவாறு. (சுஎ)

முன்றிலின்கணின்றிடம்பெறுவரசர்மாமுடிக... .....*
ளொன்றொடொன்றுரைந்தெற்றிமேலொளிபொதிசெறி
சென்றுசென்றுறுதிசைதொறுந்திகழ்ந்தது செம்பொற்
குன்றெனும்படிநின்றதுகுருகுலன்கோயில்........ *

(எ-து) தெருவாசலிலேநிற்கஇடம்பெறாமல் அரசருடையகிரீடங்
கள் ஒன்றினொடொன்று தேய்ந்தும் இடிபட்டும் மேலேபிரகாசிக்கி

ன்ற அபரஞ்சிப்பொடிகள் தெறித்துப்போய்ப்பொருந்துகின்றதிக்குகள்தோறும்விளங்கியதுமகாமேருமலையென்னும்படிநின்றது! துரியோதனன் அரமனையென்றவாறு. (௬௮)

என்றிசைக்குநல்லொளிநிமிரொழின்மணிமகுடக்......*
குன்றிசைக்கும்வண்கோபுரநீணகர்குறுகித்.........*
தென்றிசைக்குளிர்செண்பகமலர்தொறுஞ்சிறுதேன் *
நின்றிசைக்கும்வண்சோலைவாயமர்ந்தனனெடுமால் *

(எ-து) சூரியனெனச்சொல்லுகின்றபிரகாசமுயர்ந்த அழகியரத்நங்கள்பதித்த சிகரங்களையுடைய மலையென்றுசொல்லுகிற வளத்தைப்பெற்ற கோபுரத்தையுடைய நெடிய அஸ்தினபுரத்தைச்சேர்ந்து அதற்குத் தென்றிசையில் குளிர்ச்சிபொருந்திய சண்பகமலர்கள் தோறுஞ் சிறியவண்டுகளிருந்து பாடுகின்ற சோலையினிடத்திலே எழுந்தருளினார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௬௯)

அன்றுதூதுகொண்டிலங்கைதீவிளைத்தவனவர்க் ...*
கின்றுதூதுவந்தெயிற்புறத்திறுத்தனனென்னத்.......*
துன்றுதாதளிமுரல்பசுந்தொடையலான்றனக்குச்.....*
சென்றுதூதுவரியம்பினர்சேவடிவணங்கி..........*

(எ-து) முற்காலத்திலே ஒருகுரங்கைத் தூதாகவிடுத்து இலங்காபுரியை அக்கினிமூட்டுவித்தவர் பஞ்சபாண்டவர்க்காக இன்றுதூதாகவந்து மதிற்புரத்துச் சோலையிலிருந்தாரென்று நெருங்கிய மகரந்தத்தையுடையவண்டுகள்பாடுகின்றபசியமலர்மாலையணிந்ததுரியோதனராஜனுக்குத் தூதுவர்போய் சிவந்தபாதங்களை வணங்கிச்சொன்னார்களென்றவாறு. (௭௰)

தொல்லைநாயகன்வந்தனனென்னலுஞ்சுரும்பார்*
மல்லன்மாலையானேவலான்மாநகர்மாக்க.......*
ளெல்லைநீண்மதில்வட்டம்யோசனையெழுநூறு...*
செல்லுமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார்*

(எ-து) ஆதிநாயகனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவர் தூதுவந்தாரென்று சொன்னமாத்திரத்திலேவண்டுகள்நிறைந்த வளத்தையுடையமாலையணிந்த மார்பனான துரியோதனராஜனது ஏவுதலினாலே மகத்தாகிய அஸ்தினபுரத்திலுள்ளவர்கள் விருத்தமாகிய நெடிய எழுநூறுயோ

சனையளவுசெல்லுகின்ற பெரியபட்டணவீதிகளை அலங்காரஞ்செய்தார்களென்றவாறு. (எக)

மின்னுமாமுகிலினிலிய விதங்கண்முன்முழங்க........*
மன்னர்மன்னவனெழுந்தனன்மாலெதிர்வருவா........*
னென்னைநீயவற்கெதிர்செல்வதென்றுதன்மருகன்.....*
றன்னையன்பொடுதகைந்தனன்கொடுமைகூர்சகுனி ...*

(எ-து) மின்னுதல்செய்யும்பெரியமேகங்களைப்பார்க்கிலும்நானாவிதவாத்தியங்களுமுழங்க அரசர்க்கரசனாகியதுரியோதனன் ஸ்ரீகிருஷ்ணதேவரை எதிர்கொள்ளவெழுந்தான் அதுகண்டுதூதுவருகிறவர்களைஎதிர்கொள்வது என்னமரியாதையென்றுதன்மருமகனாகிய அந்தத்துரியோதனராஜனை அன்பினுமேலதடுத்துவிட்டான் கொடுமைமிகுந்துள்ள சகுனியானவனென்றவாறு. (எஉ)

சீர்வலம்புரித்திகிரிசேர்செங்கையான்றனக்குக்.........*
கார்வலம்புரிக்கோயிலுங்காட்சியுமமைத்துப்..... ....*
போர்வலம்புரியரசருங்கிளைஞரும்போற்றத்..........*
தார்வலம்புரித்தோளினனிருந்தனன்றவிசில் . ... ...*

(எ-து) சிறப்புமிகுந்தசங்குசக்கரமுஞ்சேர்ந்தசிவந்ததிருக்கரங்களுடைய ஸ்ரீகிருஷ்ணதேவருக்கு மேகங்கள் வலஞ்செய்யப்பெற்றஅரமனையும் காணத்தக்கபொருள்களும் பொருந்தச்செய்து யுத்தத்திலேவலிமைபெற்ற ராஜவர்க்கமும் பந்துக்களும்வணங்க நந்தியாவட்டமாலையணிந்தபுயத்தையுடைய துரியோதனராசன் சிங்காதனத்திலிருந்தானென்றவாறு. (எ௩)

தொல்பகிரதிமைந்தனுந்துரோணனுஞ்சுதனும்... ...*
வில்விதுரனுங்கிருபனுமுதலியவேந்தர்..............*
மல்குமூவிருபத்துநூறுயிரமதிபர்............... ...*
செல்வநாயகர்க்கியோசனையிரண்டெதிர்சென்றார்......*

(எ-து) அப்போது நெடுங்காலமாயிருக்கின்றகங்காபுத்திரராகிய வீஷ்மாசாரியருந் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் வில்லிலேவல்லவனான விதுரராஜனும்கிருபாசாரியரும்இவர்கள்முதலாகிய அரசர்களும் நெருங்கிய அறுபதுநூறுயிரமன்னமண்டலீகரும்ஸ்ரீகிருஷ்ணதேவரை இரண்டுயோசனைதூரத்திலேபோய் எதிர்கொண்டார்களென்றவாறு. (எச)

வந்துவந்திருமருங்கினுமன்னவர்வணங்கப் ......... ...*
பைந்துழாய்முடிப்பரமனுஞ்சண்மலர்பரப்பி ........ *
யந்தமாநகர்புகுந்தபினரசனிற்புகாமல் ............ *
புந்திகூரருள்விதுரன்வாழ்வளமனைபுகுந்தான் ... ......*

(எ-து) வந்துவந்து இரண்டுபக்கத்திலும் அரசர்கள்பணியப்பசிய துளபமாலையணிந்த கிரீடத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரும் அவர்களைப்பார்த்துக் கிருபைசெய்து அஸ்திநபுரத்துக்குவந்தபின்பு துரியோதனராஜன் அரமனைக்குப்போகாமல் கிருபையிருந்தமனதுள்ளவிதுரராஜன் வாழ்கின்றவளத்தையுடைய அரமனையிலேயெழுந்தருளினானென்றவாறு. (எ௫)

வேந்தர்யாரையும்விடைகொடுத்தகன்றபின்விமலன் ...*
வாய்ந்தமாளிகைநடுவணோர்மண்டபங்குறுகி ..........*
யாய்ந்தவல்லவர்நவமணியழுத்தியவரியே ............ *
றேந்துமாசனமிடப்பொலிந்ததன்மிசையிருந்தான் .. *

(எ-து) எதிர்கொண்ட வரசர்களுக்கெல்லாம் செலவுகொடுத்து அவர்கள்போனபின்பு ஸ்ரீகிருஷ்ணதேவர்பொருந்திய உப்பரிகையினடுவே ஒருமண்டபத்திற்போய்ச் சிற்பங்களாய்ந்த வல்லவர்களாலே நவரத்திநமழுத்திய சிங்கந்தாங்குகின்ற ஆசனங்கொடுக்க வதன்மேல்பிரகாசத்துடனே எழுந்தருளியிருந்தானென்றவாறு, (எ௬)

இருந்துவந்தருளிறைவனையிறைஞ்சினனிறைஞ்சிப் ...*
பெருந்துவந்தனைப்பிறப்பையுமிறப்பையும்பிரித்தான் *
மருந்துவந்தனையமரருக்கருளியமாயோன் ............*
விருந்துவந்தனனென்றுளமுருகியவிதுரன் .. ... ...*

(எ-து) இப்படியிருந்துமகிழ்ச்சிபொருந்திய ஸ்ரீகிருஷ்ணதேவரைவணங்கினான் வணங்கிப் பெரியசம்பந்தமாகிய சனனத்தையுமரணத்தையும் நீக்கினான் தேவாமிர்தத்தை வந்தனைசெய்த தேவர்களுக்குத்திருப்பாற்கடலைக்கடைந்துகொடுத்தருளிய நாராயணமூர்த்தி தனக்கு விருந்தாகவந்தானென்று மனமுருகிய விதுரனானவனென்றவாறு. (எஎ)

கோடுகொண்டகைக்குரிசில்பாலலர்ந்தகோகனகக் .....*
காடுகண்டிடுவண்டெனக்கண்ணிணைகளியாத் ...... .....*

தோடுகண்டுதார்விதுரனிப்பிறப்பையுந்தொலைத்தான் *
வீடுகண்டவர்க்கியம்பவும்வேண்டுமோவேண்டா...... *

(எ-று) சங்கேந்தியதிருக்கரத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரிடத்திலே மலர்ந்திருக்கின்றகரசரணாதி யவையமாகியதாமரைமலர்க்காட்டைக்கண்டவண்டுகள்போல்தன்னுடையகண்களிரண்டுங் களிப்பையடைந்து இதழைக்கொண்ட பூமாலையணிந்த விதுரனானவன் இந்தப்பிறப்பையும் நீக்கினான் மோக்ஷவீட்டையறிந்தவர்களுக்குச் சொல்லவும்வேண்டுமோவேண்டாவென்றவாறு. (எ௮)

உள்ளினானுணர்ந்துள்ளமுமுருகினனெழுந்து......... *
துள்ளினான்விழுந்திணையடிசூடினான்றுயரைத்......... *
தள்ளினான்மலர்த்தடக்கையாற்றத்துவவமுதை... ...... *
யள்ளினானெனக்கண்களாலருந்தினனளியோன் .... ... *

(எ-று) நினைத்தான் நினைத்துமனமுருகினான் எழுந்திருந்து துள்ளினான் கீழேவிழுந்து இரண்டுபாதங்களையுஞ் சிரசிலேசூடினான் துன்பத்தை நீக்கினான் தாமரைமலர்போன்ற விசாலமாகியகைகளால் தத்துவாமிர்தத்தை அள்ளினவனென்னும்படிகண்களால் பகவானழகையுண்டான் விதுரனென்றவாறு. (எ௯)

முன்னமேதுயின்றருளியமுதுபயோததியோ........ *
பன்னகாதிபப்பாயலோபச்சையாலிலையோ........ .... *
சொன்னநால்வகைச்சுருதியோகருதிநீயெய்த......... *
வென்னமாதவஞ்செய்ததிச்சிறுகுடிலென்றான்........ *

(எ-று) முன்னமே நித்திரைசெய்தருளிய பழையபாற்கடலோ சேஷசயனமோ பசியவடபத்திரமோசொல்லிய நாலுவேதங்களோ நினைத்துநீர்வருவதற்குமுன் என்னதவத்தைச்செய்ததுஇந்தச்சிறிய குடிசையென்றான் விதுரனென்றவாறு. (௮௰)

மும்மையாகியபுவனங்களனைத்துமுண்முதல்வ... ..... *
னெம்மையாளுடைநாயகன்விருந்தினுக்கிசைந்தா ... *
னம்மவென்றனனைநூறாயிரமடையர்......... ...... *
தம்மைநோக்கினனவர்களும்விரைவுடன்சமைத்தார்... *

(எ-று) திரிவிதமாகியபுவனங்களையெல்லாமுண்டருளிய முதல்வனாய் எம்மையாளாகவுடைய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்விருந்துக்கு

சம்மதித்தாரென்று ஆச்சரியப்பட்டனன் அப்போது அறுநூறாயிரஞ்சமையற்காரரைப்பார்த்தான் அவர்களுஞ்சீக்கிரத்திலே சமைத்தார்களென்றவாறு. (௮௬)

வந்தகொற்றவேல்வரிசிலையவர்க்குவாளவர்க்கும்........*
கந்தடர்ப்பனகரிக்குமெங்கவனவாம்பரிக்கும்... ....*
ஐந்தலைபத்துநூறாயிரமரசர்க்குமெவர்க்கும்............*
இந்திரர்க்குமெய்தாவமுதெனும்படியியற்றி... .. ...*

(எ-து) ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியுடனேவந்தவெற்றியையுடையவேல் நெடியவில்வாள்முதலிய ஆயுதத்தையுடையவர்களுக்கும் கட்டுத்தறியைப்பொருதவனவாகியயானைகளுக்கும் வெவ்வியவேகத்தையுடையதாவுகின்ற குதிரைகளும் ஐம்பதுலக்ஷம் அரசர்களுக்கும்மற்றுமுள்ளவர்களுக்கும் தேவேந்திரனுக்கும் கிடைக்காத அமிர்தமென்று சொல்லும்படி சமைத்தென்றவாறு. (௮௭)

அமைத்தவாசனைநீர்கொடுமெஞ்சனமர்டிச்....... .... ...*
சமைத்தபல்கறியடிசிறன் விருப்பினாலருந்தி...........*
புமைக்குநாயகனிரவொழித்தருளினுறுதவ..... ......*
இமைப்பிலாரமுதருந்திய வியல்பெனவிருந்தான் ...*

(எ-து) வாசனைகட்டியநீரைக்கொண்டுஸ்நானஞ்செய்து சமைக்கப்பெற்ற, அநேகவிதமாகியகறியமுதுகளையும் அன்னங்களையும் தன்னுடையவிருப்பினாற்புசித்து உமாதேவிக்குநாயகனாகிய உருத்திரனது இரத்தலையொழித்தருளிய மகாவிஷ்ணுவானவர் கொடுக்கத்தேவர்களமிர்தத்தையுண்ட தன்மையென்று சொல்லும்படியாயிருந்தாரென்றவாறு. (௮௮)

வாசநீரும்வண்சுண்ணமுமுறைமுறைவழங்கிப்........*
பூசுறுந்தொழிற்பூசினார்சூடினார்புனைந்தார்.......... ...*
வீசுசாமரமிரட்டவெண்மதிக்குடைநிழற்றக்... ......*
கேசவன்மணிக்கேசரித்தவிசிடைக்கிளர்ந்தான்.........*

(எ-து) வாசனையுடையபன்னீரும்வளத்தையுடையபச்சைக்கருப்பூரங்களும் கிரமப்படிகொடுத்துப்பூசுகின்ற தொழிலையுடைய சந்தனமுதலியவையும்பூசினார்கள் மலர்முதலியவைகளைச்சூட்டினார்கள் ஆபரணமுதலியவைகளை அலங்கரித்தார்கள் வீசுகின்றசாமரங்களிரட்ட

வெள்ளிய சந்திரவட்டக்குடை நிழலைச்செய்ய ஸ்ரீகிருஷ்ணதேவரானவர் ரத்தினங்களாற் பதிக்கப்பட்டசிங்காசனத்திலே எழுந்தருளியிருந்தாரென்றவாறு. (அசு)

ஞானகஞ்சுகவிதூரன் வாழ்மனையினாயகனும்...... ... *
போனகம்பரிவுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்........*
றானுமேருவுக்கப்புறத்தவ்வமுதருந்தப்...............*
பானுவும்பெருங்குடதிசைப்பரவையிற்படிந்தான் ...*

(எ-து) தத்துவஞானமாகிய ஜீராலைவத்தரித்தவிதூரமகாராஜன் வாழ்கின்றதிருமனையில் ஸ்ரீகிருஷ்ணபகவானும் அறுசுவையுண்டியும் அன்புடனே புசித்திருந்தசமையத்திலேதானும் மேருமலைக்கப்புறத்திலிருக்கின்ற அமிர்தத்தைப்புசிக்கச்சூரியனும் பெரியமேற்றிசைக்கடலின்மேலமுழ்கினனென்றவாறு. (அ௭)

கருதியந்தணர்யாவருந்தங்கடன்கழிப்பச்.... ...... .....*
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்..*
பருதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலிற்பரந்த......*
குருதியாமெனதிவந்தெழச்சிவந்ததுகுடபால்.........*

(எ-து) அப்போது பிராமணர்களெல்லாரும்மாலைப்பொழுதிலே தாங்கள்செய்யும் மாலைக்கடனைக்கழிக்க நினைத்து வேதமென்கிறவெவ்வியவில்லின்மேல் நீராகியபாணத்தைக்கையாற்றொடுத்துச்சூரியனுடையபெரிய சத்துருக்களின்மேல்விட்டபடியால் பரவியஉதிரமென்று சொல்லும்படியாய் மிகவுஞ்சிவந்தது மேற்றிசையென்றவாறு. (அஅ)

தரங்கவாரிதிப்புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி..........*
லுரங்கொளகூர்நெடுமைபடைகளாலவுணர்தமுடலிற்..*
றரங்கமேழுடைக்கடவுளுநிரைநிரைதுணித்த....... .. *
கரங்கள்போன்றனகளைதொறும்வளர்துகிர்க்காடு......*

(எ-து.) அலைகளையுடையசமுத்திரத்துக்கப்புறத்தேஎதிரேபொருகின்றவெய்யயுத்தத்திலே வலிமையைக்கொண்ட கூர்மைபொருந்தியநெடிய ஆயுதங்களால் அசுரருடைய தேகத்திலே ஏழுகுதிரையையுடைய சூரியனும்வரிசைவரிசையாகத் துணித்தகைகள் போலுமிருக்கின்றனகளைகள்தோறும்வளர்கின்றபவளக்காடென்றவாறு. (அ௯)

நீதியிற்புகல்பகலெலா நீரரமகளீர்......................*
மீதுறைதத்தெழும்வெவ்வெயிற்படாவகைவிரித்துப்... *
போதுபுக்கதென்றினம்படச்சுருக்கியபூம்பட்..........*
டாதபத்திரம்போன்றனதாமரையடவி................ *

(எ - து) நீதியினூற்சொல்லுகின்ற பகற்பொழுதெல்லாம் நீரரமகளிரானவர்கள் தங்கண்மேலேபட்டெழுகின்ற வெவ்வியவெய்யிற்படாதவிதம் விரித்துப்பொழுதுபோயிற்றென்று ஒன்றாகச்சுருக்கிய அழகியபட்டுக்குடைகள்போன்ற அங்கேமலர்ந்ததாமரைக்காடுள-து

கலந்துமங்கலமுழவுவெஞ்சங்கொடுசறங்க.......... ...*
மிலைந்தபூங்குழல்வனிதையர்மெய்விளக்கெடுப்பக்.....*
கலந்ததாமரைத்தடமெலாங்குவிந்ததுகண்டு... ..... *
மலர்ந்ததாமரைபோன்றது மாநகர்வட்டம்...........*

(எ - து) மங்கலபேரிகைகளானவை வெள்ளியசங்கங்களோடுங்கூடிச்சத்திக்கமலர்மாலைகளைத்தரித்த கூந்தலையுடையமங்கயர்கள்மெய்யாகிய விளக்குகளெடுக்கக்கலந்திருக்கின்ற தாமரைமலர்கள்தடாகங்களனைத்திலுங்குவிந்ததைக்கண்டு மலர்ந்திருக்கின்ற தாமரைமலரையொத்தது பெரியஅவ்ஸ்தினபுரத்தினுடையவட்டமென்றவாறு. *

உரகபுங்கவன்மணிமுடியொப்பனதீப................ ..*
மிருமருங்கினுமாயிரமாயிரமேந்த.......................*
வரிசுமந்தபேராசனத்தழகுடனிருந்த................ ...*
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி...... ...*

(எ-து) ஆதிசேஷனுடைய ஆயிரமணிமுடிகளையொப்பனவாகிய தீபங்களை யிரண்டுபக்கத்திலு மிரண்டாயிரமேந்தச்சிங்கத்தினாற்சுமக்கப்பட்டபெரியஆசனத்திலே அழகுடனே எழுந்தருளியிருந்த ஸ்ரீகிருஷ்ணபகவானைப் புண்ணியத்தையுடைய விதுரராஜனும்வணங்கினென்றவாறு.

(௯௰)

பொங்கராவணைபொலிவறப்போந்தபின்பொதுவர்...*
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்து......*
கங்கைமாநதி கால்வழிகருணையங்கடலே...............*
யிங்குதீதனித்தெழுந்தவாறுரைத்தருளென்றுன்... ...*

(எ-து) பொலிவினையுடைய சேஷசயனமானது பொலிவுநீங்கவந்துபின்பு ஆயர்பாடியில்வளர்ந்து மகத்தாகிய மருதமரத்திடத்திற்

றவழ்ந்துகங்காநதியானது திருவடியிலே பெருகப்பெற்றகிருபைக்க டலேஇவ்விடத்திலே நீர் சனித்தெழுந்தருளியவாறு அனுக்கிரகம்ப ண்ணுமென்றான் விதுரனென்றவாறு. (௬௧)

தோட்டுவந்துசெந்தேனுகர்சுரும்புசூழ்தொடையாய்க்*
காட்டுவந்துமுன்றிரிந்துதங்கடவநாட்கழித்து........ *
நாட்டுவந்தபேணவர்க்குநல்குருநாடு.................*
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான்........*

(எ-து) பூவிதழிலேவந்து சிவந்ததேனைப்புசிக்கின்ற 'வண்டுகள்சூழ்ந்தமாலையையுடைய விதுரனே காட்டிலேமுன்னே சந்தோஷமாய்த்திரிந்து தங்களுக்குச்செலுத்தவேண்டிய நாளைக்கழித்து நாட்டிலேவந்திருக்கின்ற பஞ்சபாண்டவர்களுக்கும் நல்லகுருநாட்டைக்கேட்கவந்தோமென்று அருளிச்செய்தாரதைவிதுரனுங்கேட்டான். எ,

முழக்கினாலுயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை.. .... ...*
வழக்கினாலறிந்தடலரவுயர்த்தகோன்வழங்கான்........*
சழக்கினாவிருதிசையினுமுரசெழச்சமரி........ .......*
லுழக்கினாலலதுணர்வனோவென்றவனுரைத்தான்...... *

(எ-து) சத்தத்தினாலுயர்ந்த முரசக்கொடியையுயர்த்ததருமபுத்திரமகாராஜனுக்கு உரியபாகத்தைமுன்னோர்கள் வழக்கத்தினாலறிந்து வலிமையுள்ள சர்ப்பக்கொடியுயர்த்த துரியோதனன்கொடுக்கமாட்டான் குற்றமில்லாத எட்டுத்திக்கிலும்பேரிகைசத்திக்கயுத்தத்திலே கலக்கினாலல்லாமல் அறிவானோவென்று 'சொன்னான்விதுரராஜனென்றவாறு, (௬௩)

வாளைவாவியினுகண்டெழவளரிளங்கமுகின்.......... ...*
பாளைவாயளிமுரன்றெழும்பழனநாடுடையான்... ...*
நாளைவாழ்பவர்க் களித்திலனெனிலெதிர்நடந்து... ...*
மூளைவாய்ப்புகமுடிப்பெம்வெம்போரெனமொழிந்தான்

(எ-து) வாளைமீன்களானவைதடாகத்திற்குதித்தெழும்பவளருகின்றஇளங்கமுகின் பாளையினிடத்திலே வண்டுகள்சத்தித்து எழுகின்ற வயல்கள்சூழ்ந்தநாட்டையுடைய துரியோதனன் நாளை அவர்கள்பங்கைக்கொடாமற்போனானேயானால் எதிர்போய்மூளையானது வாயிலேபுகும்படியுத்தஞ்செய்துமுடிப்போமென்றார்ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௬௪)

விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெலிவுற்...........*
திரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார்...*
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி. ...... *
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம் ...*

(எ-து) சீக்கிரத்திலே தாவுகின்றகுதிரைகளையுடைய அரசர்கள் இதமுண்டாகும்படிவாடி இரந்துவேண்டிக்கொண்டாலும் பந்துக் களுக்குஒருபொருளையுங்கொடுக்கமாட்டார்கள் பரவியயுத்தத்திலே எதிர்த்தவர்களெல்லாம் சாகும்படியாய்ப் பாணங்களைப்பிரயோக ம்பண்ணினமாத்திரத்திலே சொன்னவைகளையெல்லாம் அவர்களுக் குக்கொடுப்பார்களென்றவாறு. (கூரு)

என்றுபாரினியற்கையும்விதுரனுக்கியம்பி..........*
வென்றுபோர்கெழுநேமியான்விடைகொடுத்தருளி..*
குன்றுபோற்புயக்காவலர்கொடுந்துடிகறங்க..........*
மன்றனுண்மலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான்...... *

(எ-து) இப்படியென்றுஉலகத்தினுடைய இயற்கையையும்விதுர ராஜனுக்குச்சொல்லி யுத்தத்திலே ஜெயித்துவிளங்கியசக்கரத்தையு டையஸ்ரீகிருஷ்ணபகவானானவர் செலவுகொடுத்துமலைபோலுந்தோ ளையுடைய காவற்காரர்கள் கொடியசத்தத்தையுடைய பறைகளைமு ழக்கவாசனைபொருந்திய அன்றலர்ந்த புஷ்பசயனத்தின்மேல் நித்தி ரைசெய்தானென்றவாறு. (கூசா)

குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்முல்லைத்... ...*
தளவவாணகைபரப்பிமேசததளமலர்க்கை... .........*
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினால்... ...*
களிகொடோள்விலைக்கணிகையைப்போன்றதக்கங்குல் *

(எ-து) குளிருகின்றபெரிய சந்திரனாகிய முகத்தினிடத்தேவிளங் குகின்றசெவ்வலியாகிய வாயையும் முல்லையரும்பாகிய ஒளியையு டையபற்களையுங்காட்டித் தாமரைமலராகியகைகளையளவாகக்குவித் து அளியுடனே மலர்த்திராமையினாலே களிப்பைக்கொண்டதோளை விற்கின்றவேசியைப்போன்றது அந்தராத்திரியென்றவாறு. (கூஎ)

அளைந்தவாரிருட்கடல்பொருதொருபுடையண்டம்... *
பிளந்ததாமெனக்கரும்படாம்பீறியதென்ன... ... ...*

வளைந்தவேழ்கடல்வற்றமேல்வடவையின்முகத்தி......*
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவியின்கிரணம்... ...*

(எ-து) அலைபப்பெற்றநிறைந்த இருளாகிய சமுத்திரத்தைத் தாங்கமாட்டாமல் ஒருபக்கத்து அண்டம பிளந்ததாமென்றுசொல்லவும் கரியவல்லிரங்கழிந்ததென்னவும் வளைந்திருக்கின்ற எழுசமுத்திரமும்வற்றிப்போக மேலிருக்கின்ற வடவாமுகாக்கினியானதுபிரகாசித்ததென்றுசொல்லவும் விளங்கின சூரியகிரண மென்றவாறு.

இகலும்வாளரவுயர்த்தவனிருந்ததொல்பதியி...... ...*
லகிலநாயகனொருதனிநடத்தவாறறிந்து................*
மகரவாரிதியகன்றுமாமருங்குறவளைந்த........ .......*
திகிரிபோலவந்தெழுந்தனனிரவிகீழ்த்திசையில்.......*

(எ-து) பகைகொண்ட ஒளியையுடைய சர்ப்பக்கொடியையுயர்த்த துரியோதனனிருந்த பழைய அஸ்தினபுரத்திலே லோகநாயகராகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் ஒப்பறத்தனியேவந்ததுதெரிந்து மகரமீனையுடைய சமுத்திரத்தைவிட்டுநீங்கிப் பக்கத்திலேவளைந்த சக்கரத்தைப்போலவந்து உதயமானான் சூரியன் கீழ்த்திசையில், எ-று,

[வேறு.]

சோதிவானநதிமைந்தனும்பழைபசுருதியாலுயர்துரோணனு.....*
மாதியாகவுயரரசரும்படியளித்தமன்னவரநேகரு ..........*
நீதியாறுவகையைந்துபத்தொடறுபத்தொராயிரவர்நிருபருந்... *
தீதிலாததிறலக்குரோணிபதினொன்றுபெற்றமிகுசேனையும்.......*

(எ-து) ஒளியையுடைய கங்காபுத்திரனாகிய வீஷ்மாசாரியரும், பழமையாயுள்ள வேதத்தாலுயர்ந்த துரோணாசாரியர்முதலாகவுயர்ந்தராஜாக்களும், பூமியையாளுகின்ற அநேகராஜாக்களும, நீதியையுடைய மூன்றுலக்ஷத்து அறுபத்தோராயிரம் நிருபர்களும், குற்றமற்ற பதினொரக்குரோணியாகிய மிகுந்தசேனைகளும். எ - று.

தொக்கவெண்கவரியாலவட்டமிவை சொட்டைவாள்சுரிகைதகிலுடைக்களாஞ்சிபலகொண்டுலாவிவருகன்னிமங்கையர்களனைவரும்.[ன்
மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யாவருந்........*
தக்கதம்பியரும்வந்துசூழவுயர் தரணிமேனிருபர்தம்பிரான்......*

(எ-து) கூட்டமாயுள்ள வெள்ளியசாமரங்களும், ஆலவட்டங்களும் வளைதடியும், வாளும், உடைவாளும், வஸ்திரங்களும், கைகளி

லே காளாஞ்சிகள்கொண்டு உலாவிவருகின்ற இளமையுள்ள மங்கை யர்களநேகம்பேரும்,மிகுந்தபிராமணர்களும், அநேககலைக்கியானங் களிலே வல்லமையுடையவர்கள் யாவர்களும் தகுதியுள்ள தம்பிமார்க ளும்வந்து சூழ்ந்துகொண்டிருக்க, உயர்ந்தபூமியிலே அரசர்க்கரச னாகிய துரியோதனனென்றவாறு. (௱க)

நிரைகதிரக்கனகநீள்சுவர்ப்பவளவுத்தரத்திடைநிரைத்தவெண் ...*
பருமணிக்கிரணபற்பராகவயிரத்துலாமிசைபரப்பிவெண்.........*
டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகைதைத்துமா... ... ..*
மரகதத்தினெடுங்கோடுதூணிடையமைத்தமண்டபமருங்கரோ....*

(எ-து) வரிசையாகிய கிரணங்களையுடைய பொன்னினாற் செய்த நெடியசுவரின்மேல் பவளத்தினால் உத்தரம்போட்டு அதன்மேல்ப ருத்த ரத்தினங்களாலும், கிரணங்களையுடைய மாணிக்கங்களாலும், வஜ்ரங்களாலுமாகிய துலாம்வைத்து அதன்மேலே வெள்ளியமுத்து வர்க்கங்களைப்பரப்பி வைடூரியத்தால் புதியனவாகிய அழகையுடைய பலகைதைத்து மகத்தாகிய மரகதத்தினாலே கோடி தூண்களை இடையிலேயமைத்த மண்டபத்திலென்றவாறு. (௱உ)

முட்டநித்திலநிரைத்தபந்தரிணகைத்தசேரிமுகத்ததாய்...........*
வட்டமெத்தைகொடமைத்தபீடமிசைவாசவன்கொலெனவைகினான்
பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்வந்துசேவடிபணிந்தபின் [யே.
னிட்டபொற்றவிசின் முறைமையாலினி திருக்கவென்றவனா யேவி

(எ-து) முட்டும்படியாய் முத்தினால் வரிசையாகச்செய்த பந்தரி ன்நகுதலைச்செய்த சிறந்த சிங்காரகத்தையுடைய தாய்வட்டமாகிய மெத்தையைக்கொண்டுசெய்த பீடத்தின்மேல் தேவேந்திரனைப்போ லிருந்தான் அப்போது பட்டவர்த்தனர்களும் மகுடவர்த்தனர்க ளுஞ் சிவந்தபாதத்தைவணங்கினார்கள், பின்பு வரிசையாயிட்டிருக் கின்ற பொன்னினாற்செய்த ஆசனத்தின்மேல் கிரமப்படி யினிதாக விருக்கக்கடவீரென்று அவர்களையேவுதல் செய்தென்றவாறு. (௱௩)

காவன்மன்னவர்முகங்கடோறுமிருகண்பரப்பியமர்கருதுவோ... *
ரேவலின்கண்வருதூதனைமிடையவனின்றுநம்மவையிலெய்தின.....*
லோவலின்றியெதிர்சென்றுகண்டுதொழுதிறவுகூறிவினியுங்களூர்..*
திவலஞ்செயவடர்ப்பனென்றுநனிசிறினன்முறைமைமாறினன்...*

(எ-து) பூமியைக்காக்கின்றராஜாக்களுடையமுகங்களையெல்லாந் தன்னுடைய இரண்டுகண்களாற்பார்த்து நம்மோடு யுத்தஞ்செய்ய

நினைக்கும் பஞ்சபாண்டவர்களுடைய ஏவுகையினாலே வருகின்ற தூதனாகிய இடையனானவன் இன்று நம்முடைய சபையிலே வந்தால் ஒழிதலில்லாமல் எதிர்கொண்டுவணங்கி உறவுகொண்டாடினால் இனிஉங்களுடைய நெருப்புவலங் கொள்ளும்படியாய்க் கொளுத்திவிடுவேனென்று மிகவுஞ்சிறினான் முறைமைமாறினவனாகிய துரியோதனனென்றவாறு. (ரச)

இந்தவண்ணமுரை செய்துமன்னருமிராஜராஜனுமிருக்கவே.....*
தந்தவண்ணனுடன்வந்தவண்ணனொளி தங்குகண்டுயிலுணர்ந்தபின்
கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழித்...*
திந்தவண்ணமுனிருந்தபேரவையின்மேலினனிசைகொள்வேயினன்.*

(எ-து) இந்தப்பிரகாரஞ்சொல்லி அரசர்களும்அரசர்க்கரசனாகிய துரியோதனனுமிருக்கவெள்ளைமேனியனாகியபலபத்திரருடனேயிருந்த ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிபிரகாசந்தங்கியநித்திரைதெளிந்தபின்புவாசனைபொருந்திய அழகியமலர்களைக்கொண்டுபூசைசெய்து காலையிலேசெய்யவேண்டியகடன்களெல்லாஞ்செய்துமுடித்து முன்சொன்னப்பிரகாரமிருந்தபெரியசபைக்கெழுந்தருளினார் இசையைக்கொண்டழுங்கிற்குழலையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (ரரு)

துன்னுசங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிதுரனும்.....*
மன்னர்மன்னனையொழிந்தமன்னவரும்வந்துசேவடிவணங்கினார் *
கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனனழன்றுளஞ்சகுனியுருகினான் ...*
முன்னதின்றவர்களிட்டபீடமிசைமொய்துழாய்முகிலுமெய்தினான்.

(எ-து)வீஷ்மாசாரியரும் துரோணாசாரியரும் அசுவத்தாமாவும் நீதியைத்தரித்த விதுரராஜனுந் துரியோதனனையொழிந்தமற்றஅரசர்களும்வந்து சிவந்தபாதத்தைவணங்கினார்கள் அப்போது கர்ன்னமகாராஜனுந் தலையைக்கவிழ்ந்துகொண்டிருந்தான் சகுனி வெப்பமாய்நினைந்திருந்தான் எதிரேஇருந்தவர்கள்இட்ட ஆசனத்தின்மேல் நெருங்கிய துளபமாலையணிந்தமேகவண்ணராகிய ஸ்ரீகிருஷ்ணதேவருமெழுந்தருளியிருந்தாரென்றவாறு. (ரசா)

முன்னகங்குடைகவித்தகாளமுகின் முன்னிருந்தபின்முகங்கொடா, தென்னகத்தனையொழித்துநென்னலிடையிந்தமாநகரிலெய்தியும், பொன்னங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிது.

புகலென்று, பன்னகத்தனையுயர்த்தகோவுமூனா பகரமர்றுமெதிர்பகருவான்.......................................................(௱௭)

(எ-து) முன்னேகோவர்த்தனகிரியைக் குடையாகக்கவித்த கரியமேகவண்ணரான ஸ்ரீகிருஷ்ணதேவரெழுந்தருளிய பின்பு முகங்கொடாமல் என்வீட்டைவிட்டு நேற்றைப்பொழுது இந்தவூரில்வந்தும் வீரலட்சுமியைக்கொண்டபுயத்தையுடைய விதுரன்வீட்டிலே போனதென்ன இதனைச்சொல்லுமென்று சர்ப்பக்கொடியையுயர்த்த துரியோதனராஜன் கேட்க ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியும் அதற்கெதிருத்தரஞ்சொல்லுவாரென்றவாறு.
(௱௭)

என்னிினின்னிலொருபேதமில்லை யிதுவென்னிினின்னிலதுவென்னவே, மின்னின் முன்னிலகு விறனெடும்பனை விதுரன்வந்தெதிர் விளம்பினன்; துன்னிலின்னமுளதொன்றுபஞ்சவருரைக்கவந்ததொருதூதன்யா, னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன் வெறுக்கவெண்ணுவதுநீதியோ.......................................................*

(எ-து) என்வீடென்றும் உன்வீடென்றும் பேதமில்லை இதுஎன்வீடு அதுஉன்வீடென்றசொன்னாலும் மின்னல்போல்பிரகாசிக்கின்றவெற்றியையுள்ள நெடியவில்லையுடைய விதுரராஜன்வந்து எதிரேவிருந்துசொன்னன் அதல்லாமல் உன்னிடத்திலேஇன்னமொருகாரியமுண்டு பஞ்சபாண்டவர்கள் சொல்லைச்சொல்லவந்த ஒரு தூதன்யான் உன்னிடத்தில் இனிமையுள்ள அன்னத்தையுண்டு உன்னோடேதானே வெறுக்கநினைப்பது நீதியோவென்றார், ஸ்ரீகிருஷ்ணசுவாமியென்றவாறு.
(௱௮)

அரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயரசழிப்பினுங்..........*
குரவர்நல்லுரைமறுக்கினும்பிறர்புரிந்தநன்றியதுகொல்லினும் ..*
ஒருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருடனழன்றுபொரவுன்னினு,
மிரவியுள்ளளவுமதியமுள்ளளவுமிவர்களேநரகிலெய்துவார்... ...*

(எ-து) சர்ப்பக்கொடியையுடைய துரியோதனனே புத்தியையுடைய மந்திரிகளாயிருந்து அரசாங்கத்தை யழித்தாலும் ஆசிரியர் சொல்லைத்தடுத்தாலும்,ஒருவர்செய்தஉபகாரத்தைமறந்தாலும்ஒருத்தர்வீட்டிற்சாப்பிட்டுபின்புஅவருடன்பகைத்துயுத்தஞ்செய்யநினைத்

தாலும்,சூரியசந்திரர்களுள்ளவரைக்கும்,இவர்கள் நரகத்திலேயடைவார்களென்றவாறு. (௱௯)

சீதநாண்மலர்மடந்தைகேள்வனிவைசெப்பவுந்தெரியவொப்பிலா நாகநாயகன் முகத்தில்வைத்தவிருநயனனாகிமிக நகைசெயா,தூதனாகிவருதன்மைசொல்லுமெனமன்னர்மன்னனிதுசொன்னபின்-வேதநாறுமலருந்திவண்டுளபவினைசெய்தாரவனு முரைசெய்தான் ...*

(எ-று) குளிர்ச்சிபொருந்திய அன்றலர்ந்ததாமரைமலரிலிருக்கும்லட்சுமிகாந்தராகிய ஸ்ரீகிருஷ்ணதேவர் இந்தவார்த்தைகளைச்சொன்னமாத்திரத்தில்ஒப்பில்லாதநாரதராகிய! அவருடையதிருமுகத்தில்வைத்தஇரண்டுகண்களையுடையவனாகி மிகவும்நகைசெய்து தூதனாய்வந்தகாரியத்தைச்சொல்லுமென்று துரியோதனன்சொன்னபின்புவேதங்கள் மணக்கின்ற தாமரைமலராகிய நாபியையும்வாசிக்கின்றவண்மைபொருந்திய துளபமாலையையுமுடையஸ்ரீகிருஷ்ணசுவாமியும் அருளிச்செய்தாரென்றவாறு. (௱ய)

சூதினாலரசிழந்து நின்றுணைவர்சொன்ன சொல்லும் வழுவாதுபோ, யேதிலார்களெனநொந்துதண்ணிழ லிழந்தகானினிடையெய்தியும், தீதிலாவகைகுறித்தநாள்பல கழித்துவந்தனர் செகத்தினிற்கோதிலாதகுருகுலமகீபவநரிமைநண்பொடுகொடுத்தியே... ...*

(எ-று) உன் துணைவராகிய பஞ்சபாண்டவர்கள் சூதாடுகையினாலே ராஜ்யபாரத்தையிழந்துசொன்னவார்த்தையுந் தப்பாமற்போய் அயலாரென்றுசொல்லும்படிநொந்து குளிர்ந்தநிழலில்லாதகாட்டினிடத்தேபோகியும் குற்றமில்லாதபடி குறித்தநாள் அநேகமுங்கழித்துவந்தார்கள் பூமியிலே குற்றமற்ற குருகுலத்திலேபிறந்தராஜாவே அவர்களுடைய உரியபூமியைச்சிநேகத்தோடுகொடுப்பாயென்றுபின்னுஞ்சொல்லுவார் ஸ்ரீகிருஷ்ணதேவர், எ-று (௱யக)

சொல்லவாவுரகதுவசநின்னுரிய துணைவர்தங்களையழைத்துநீ, வல்லவாறுசிலநாடளித்தவர்கடம்முடன்கெழுமிவாழ்தியே, னல்லவாய்மைநிலையுடையையென்றரசர் நாடொறும்புகழ்வர் நண்புகொண்டல்லவாமெனமறுத்தியேலறமுமாண்மையும்புகழுமல்லவே... ...*

(எ-று) சொல்லவிரும்புகின்ற சர்ப்பக்கொடிபடைத்ததுரியோ

தனராஜாவே உனக்குஉரிமையுள்ள உடன்பிறந்தவர்களை அழைத்து
க்கூடியமட்டில் நீசிலநாடுகொடுத்து அவர்களுடன்கூடிவாழ்வையே
யானால் நல்லசத்தியத்தையுடையாயென்று ராஜாக்கள் சிநேகித்து
நாள்தோறும்புகழ்ச்சிசெய்வார்கள் அப்படியல்லவென்று மறுத்தி
யேயானால் அதிதருமமும் சௌரியமும்கீர்த்தியுமல்லவென்றவாறு.

என்றுகேசவனியம்பவங்கெதி ரிராஜராஜனுமியம்புவா, னன்றகு
தபொருதுரிமையாவையு மிழந்துபோயினர்களவருச், சின்றுநீவி
ரகின்மீளவுங்கவர வெண்ணினலவரிவெளியதோ, சென்றுகானிலவரி
ன்னமுந்திரிவதுறுதியென் றுநனிசீறியே.......................*

(எ-து) இப்படியென்றுஸ்ரீகிருஷ்ணதேவரானவர்சொல்ல அங்கேஎதி
ரோராஜாதிராஜனாகிய துரியோதனராஜன்சொல்லுவன் - அன்றகு
தாடித் தங்களுரிமையெல்லாம் இழந்து போயினவர்களாகிய பஞ்ச
பாண்டவர்களுக்கு இன்றுநீர் உபாயத்தினாலே மறுபடியுங்கிருகிக்கத்தி
னைத்தால் அவனைப்போல நானும் எளியவனோ அவர்கள்காட்டுக்குப்
போய்இன்னமுந்திரிவது உறுதியென்றுமிகவுஞ்சீறியென்றவாறு.*

நீவெறுக்கிலெ னிருந்தமன்னவர்நகைக்கிலென்பலநினைக்கிலென்
போய்நகைக்கிலெ னுரைத்தவுண்மைமொழிபொய்த்ததென்றமரர்
புகலிலென், வேய்மலர்த்தொடையலைவரொன் னுடன்வெறுத்துவெஞ்
சமர்விளைக்கிலென், ஈயிருக்குமிடமெனினுமப்புவியில்யானவர்க்க
ரசினிக்கொடேன்..........................................*

(எ-து) நீவெறுத்தாலென்ன,இந்தராஜாக்கள்நகைத்தாலென்ன ப
லவாகநினைத்தாலென்ன,போய்ச்சிரித்தாலென்ன சத்தியவசனம்பொ
ய்த்துப்போச்சுதென்று தேவர்கள்சொன்னாலென்ன, புஷ்பமாலை
யைத்தரிக்கின்ற பஞ்சபாண்டவர்கள் என்னுடனே வெறுத்துவெவ்வி
யயுத்தஞ்செய்தாலென்ன, ஈயிருக்கும் அவ்வளவிடமாகிலும் இந்த
ப்பூமியிலே யான் அவர்களுக்கு அரசாட்சிகொடுக்கமாட்டேனென்
றான் துரியோதனனென்றவாறு. (௱௰௪)

கார்வழங்குருமெனச்சினத்திநெடு கண்ணிலான்மதலைகழறவும்...*
பார்வழங்கநினை வில்லைபாகிலவர்பதிகளாயினும் வழங்குவாய்த்...*
தார்வழங்குதடமார்பவென்னவலைவதாறுமன்னவன்மறக்கவைந்..*
தூர்வழங்குகெனவுற்றிரந்தன னிவ்வுலகெலாமுதவுமுந்தியான்...*

(எ-து)மேகம்வழங்குகின்றஇடியைப்போல் கோபத்தோடுதிருத
ராட்டிரனுடையபிள்ளையாகிய துரியோதனன் சொன்னபோதுபூமி
யைக்கொடுக்கஉனக்குமனமில்லாமற்போனால்அவர்களூர்களையாவது
கொடுப்பாய் நந்தியாவட்டமாலையணிந்தமார்பனேயென் றுசொல்ல
அவைகளையுந் துரியோதனன்மறுக்கஐந்தூராவதுகொடுப்பாயென்
று இரப்பாகக்கேட்டார் இந்தவுலகத்தையெல்லாந்தரப்பட்ட நாபிக்க
மலத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு. (௱௰௫)

மாடளிக்குலநெருங் குபைந்துளபமாலையாய்மகரவேலைசூழ்... ...*
நாடளித்திடவுமைந்துபேருடையநகரளித்திடவும்வேண்டுமோ...*
காடளிக்குவதனிடைதிரிந்தெழில்கரந்துபோயினர்கள்காணவோர் *
வீடளிக்கினும்வெறுப்பரோவிதனைவிடுகவென்றெதிர்விளம்பினான்*

(எ-து) பக்கங்களிலே வண்டுக்கூட்டங்கள் நெருங்கப்பெற்றபசிய
துளபமாலையையணிந்த ஸ்ரீகிருஷ்ணதேவரே மகரமீன்களையுடைய
சமுத்திரஞ்சூழ்ந்த நாட்டைக்கொடுக்கவும் ஐந்துபேருடையநகரை
க்கொடுக்கவும் வேண்டுமோ நான்காட்டைக்கொடுக்க அதிலேதிரிந்
து அழகழிந்துபோன பஞ்சபாண்டவர்கள்இப்போது காணும்படிஒ
ருவீடுகொடுத்தாலும் வெறுப்பார்களோ இதனைவிடக்கடவீரென்று
எதிரேசொன்னான் துரியோதனனென்றவாறு. (௱௰௬)

தந்தைகாதலுறுதன்மைகண்டிளைய தாய்பயந்தவிருநம்பியர்க்...*
இந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுநின்குலத்தொருவனிங்குளான்...*
முந்தமாதிலமனைத்தினுக்குமுயர் முறைமையாலுரியவரசருக் ...*
கைந்துமாநகருநீகொடாதொழியி லென்னதாகுமுனதரசியல் ... *

(எ-து) தன்னுடையதகப்பனாராசைவைத்த தன்மையைப்பார்த்
துச்சிறியதாய்பெற்றஇரண்டுதம்பிகளுக்குஇந்தவாழ்வையும் அரசா
ட்சியையுங்கொடுத்தபீஷ்மாசாரியரும் உன்குலத்திலேயொருவரி
ங்கேயிருக்கின்றார்பழமையாயுள்ளமகத்தாகியபூமிக்கெல்லாம் உயர்
ந்தமுறைமையாலே உரிமைபெற்றபாண்டவருக்குஐந்துநகரமாத்தி
ரமானாலும் நீகொடாதொழிந்தாயானால் உனதரசாட்சி என்னபிர
யோசனத்தையுடையதாகுமென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு.

ஒருகுலத்தினிலிரண்டுமன்னவருடன்பிறந்துரிமை யெய்தினு ...*
இருதிறத்தவரு மொக்கவாழ்வுறுத லெக்குலத்தினுமியற்கையே...*

பொருகுலக்களிறுவளர்திசைக்கண்மிகுபுகழ்பரப்பியெழுபவிபெறு
ங்,குருகுலத்தவரியற்கைநன்றெனமொழிந்தனன்சரியகோவலன் .. *

(எ-து) ஒருகுலத்திலிரண்டு ராஜாக்கள் உடனேபிறந்து உரிமை
யையடைந்தால் இரண்டுதிறத்தோரும் ஒக்கவாழ்வையடைவது எந்
தக்குலத்திற்குஞ்சுபாவமாகும் பொருகின்ற அஷ்டகசங்கள்வளரப்ப
ட்டதிக்குகளிடத்தில் மிகுந்தகீர்த்தியைப்பரப்பி ஏழுலோகதலத்தையும்
பெற்றகுருகுலத்தாருடைய இயல்புநன்றாயிருக்கின்றதென்றுசொ
ன்னார் நீலவண்ணரான ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௬௰அ)

பேரராவணைதுறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னையுஞ்.....*
சீரராவினையுயர்த்தகோவும்விழிதீயெனும்படிசெயிர்த்தே ... *
போரராநிருபன் மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார்*
வீரரானவரதல்லவோவுரிமை வேண்டுமோவெனவிளம்பினான்.... *

(எ-து) பெரியசர்ப்பசயனத்தைவிட்டுத்துறந்தஸ்ரீகிருஷ்ணதேவர்
இவைகளைச்சொல்ல;வன்மையுடனே பின்னையுஞ்சிறந்தசர்ப்பக்கொ
டியையுயர்த்த துரியோதனனுங் கண்கள்நெருப்பென்றுசொல்லும்
படிஉள்ளேகோபித்துப் போர்செய்கின்ற சர்ப்பராஜனாகிய ஆதிசே
டனால்நெடியஆயிரம் உச்சியைக்கொண்டுசுமக்கப்பட்டபூமியானது
சுத்தவீரருடையதல்லவோ ஒருவருக்கு உரிமையும் வேண்டுமோ
வென்றானென்றவாறு. (௬௰௯)

பொய்வளர்ந்தமொழி மன்னன்மற்றிவைபுகன்றபின்புபயவலியி
னா லிவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைகொண்டெதிரடர்த்திடே
ல்- மெய்விளங்கவருகுருநிலத்தினிடை வந்துவெஞ்சமர்விளைக்கவே
கைவழங்குகென நின்றதூணிடையறைந்துரைக்குமிவைகாவலன் *

(எ-து) அபத்தம்பேசுகின்ற துரியோதனனிவைசொன்னபின்பு
புஜபெலத்தினாலே பஞ்சபாண்டவர்களுடைய இராஜாங்கத்தையுங்
கொடாமல்மிகுந்தவலுமைகொண்டு யுத்தஞ்செய்தாயாகில்உண்மை
விளங்கவருகின்றகுருக்ஷேத்திரத்திலேவந்துவெவ்வியயுத்தஞ்செய்த
ற்குச்சம்மதித்துக்கைதட்டிக்கொடுவென்று ஸ்ரீகிருஷ்ணதேவர்கேட்
க, எதிரேயிருந்த தூணிலேயறைந்துசொல்லுவான் துரியோதன
னென்றவாறு. (௭௰)

புன்பிறப்புடையபொதுவர்தங்களொடு புறவிலானிரைபரந்திடு..*
முன்பிறப்புமுரலோடுகோவியருனைப்பிணித்ததுமறந்துநீ .......*
மன்பிறப்பிலுயர்குருகுலத்தவர்தம்வாய்மைதானுமொருமாசிலா *
வென்பிறப்புமுணராமலோசபையிலிந்தவாசகமியம்பினும் ... ...*

(எ-து) இழிந்தபிறப்பையுடைய இடையர்களோடு காட்டினிடத்தில் பசுக்கூட்டங்களைமேய்க்கும் உம்முடையபிறப்பையும் இடைச்சிகள் உம்மை உரலுடனே கட்டியதையும் நீர்மறந்துவிட்டு இராஜகுலத்திலுயர்ந்த குருகுலவரசர்களுடைய சத்தியத்தையும் ஒருகளங்கமுமில்லாத என்னுடையபிறப்பையுமறியாமலல்லவா! சபையிலே இந்தவார்த்தைசொன்னீரென்றுன் துரியோதனனென்றவாறு.௱உக-

ஏவிலங்குசிலையவர்வந்தணுகில்யானயர்ந்தெளிதிருப்பனோ, சோவிலங்குபொரவஞ்சுமோகரட குஞ்சரங்கள்பகைகொண்டதால், மேவிலங்குமுன்மலர்ந்தகையறையவேண்டுமென்பது நின்மேன்மையோ, நாவிலங்குமெனவெண்ணியோமிகவுநன்றுநன்றரசர்நியாயமே... *

(எ-து) பிரகாசிக்கின்றஅம்பையும்வில்லையுமுடைய பஞ்சபாண்டவர்கள்வந்தால் யான்வருந்தி எளிதாக இருப்பேனோ, மதம்பொழிகின்ற யானை பகைகொண்டதினால் சிங்கம் பொருதற்குப்பயப்படுமோ, யுத்தத்துக்கு வருவதானால் முன்னே கைபோட்டுக் கொடுக்க வேண்டுமென்பது உமக்குமேன்மையோ, இப்படிகேட்டதுஎன்னுடையநாவானது தப்புமென்று நினைத்தோ; மிகவும் நல்லது நல்லது அரசருடையநியாயமென்றுன் துரியோதனனென்றவாறு..(௱உஉ)

அளிவருங்குழல்பிடித்துமன்னவையிலைவருக்குமுரியாளைநா.....*
னெளிவருந்துகிலுரிந்தபோதருகிருந்துகண்டவர்களல்லவோ...*
துளிவரும்புனல்பரிந்தருந்தியிடுசோறுதின்றுயிர்சுமந்துகொண் ..*
டொளிவரும்படியிருந்தபாவியருமின்றுமானநிலையுணர்வரோ...*

(எ-து) ஐந்துபேருக்குமுரியவளாகிய துரோபதையைஇராஜசபையிலே வண்டுகள்மொய்க்கின்ற கூந்தலைப்பிடித்து நான்எளிதாகத்துகிலுரிந்தபோது அருகேயிருந்து பார்த்தவர்களல்லவோ, துளியாகவருகின்றநீரைவிரும்பியுண்டு சோற்றைத்தின்று உயிரைச்சுமந்துகொண்டு பிரகாசமுண்டாகும்படியிருந்தபாவிகளாகிய பாண்ட

வர்களும் இன்று அபிமானநிலையை யறிவார்களோவென்றான் துரி யோதனனென்றவாறு. (௱௨௩)

அன்னையானவருமிருவராமுதலளித்ததந்தையர்களைவராம்......*
பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராமொருபிறப்பிலா.
மின்னையாமுடியிலைவரும் பரிவினொடுதனித்தனிவிரும்புவா, ரென்
னையாமவரொ டொருகுலத்தரச ரெங்பதாண்மையிது வெனகொ
[ ல்லா

(எ-று) மாதாக்களிருவராம் முன்னேபெற்ற பிதாக்களைந்துபே ராம் பின்பு ஆசைகொண்டு குருகுலத்தாரென்னு முரிமையைப் பெ றுவார்களாம் ஒருபிறப்பினுமில்லாதவளாகிய ஒருத்தியை-ஆ! ஆ! இரீ டமில்லாத ஐந்துபேரும அன்புடனே தனித்தனி இச்சிப்பார்கள் யாம அவரோடு ஒருகுலத்துராஜாக்களென்பது என்ன ஆண்மை இதுயென்னவென்றான் துரியோதனனென்றவாறு. (௱௨௪)

ஞாலமுற்றுமுடையவன்மொழிந்திடநகைத்துவண்டுவரைநாதனு *
மாலமுற்றுமிவனினைவெனப்பெரிதறிந்துபேரவையகன்றும்பாய்க்,
கோலமுற்றசிலைவிதுரன்வாழ்வுபெறுகோயில்சென்றுநணிகுறுகினு
சிலமற்றவர்சினத்தபோதுமொருதீதிலாதவர்செயிர்ட்பரோ .. [ ன்

(எ-று) உலகமுழுமையுமுடைய துரியோதனன் இது சொல்லத் துவாரகைக்கு அரசராகியஸ்ரீகிருஷ்ணதேவரும் நகைசெய்து இவனி னைப்பெல்லாம் விஷமென்று நினைத்துப் பெரியசபையை நீங்கிப் போயழகியவில்லையுடைய விதுரன்வாழ்கின்ற அரமனைக்குப் போ னார் நற்குணமில்லாதவர்கள் கோபித்தபோதும் ஒருகுற்றமில்லாத வர்கள் கோபிப்பரோவென்றவாறு. (௱௨௫)

கரித்துமாலைசருகாகவும்புதியகமலவாண்முகம்வியர்க்கவுந்...... *
திருந்துகண்ணிணைசிவக்கவுங்கொடியசெய்யவாயிதழ்துடிக்கவு... *
மிருந்தபேரவையினெடிதுயிர்த்திடுமிராஜராஜனவனுக்கிவன் ... [ன்
விருந்துசெய்தவுறவென்கொலென் றரசரெதிர்விதுரனைவிளம்புவா

(எ-று) அப்போதுபூமாலைகள்கருகிச்சருகாகவும், புதியதாமரை மலர்போன்ற முகம்வியர்க்கவும், திருத்தமாகிய கண்களிரண்டுஞ்சிவ க்கவும், கொடியசிவந்தவாயிதழ்கள் துடிக்கவும், தானிருந்தசபையி லே மிகவும்பெருமூச்சுவிடுகின்ற இராஜாதிராஜனாகிய துரியோதன னனவன் அந்தகோபாலகிஷ்ணனுக்கு இவன் விருந்துசெய்த உறவு என்னவென்று அரசர்க்கெதிரே விதுரனைப்பேசுவா னென்றவாறு.

வன்பினாலவனிவௌவவென்றெனதுமனையிலுண்டியைமறந்தவன் *
றன்பதாதியொடுமினிதருந்தும்வகைதன்னிலின்னமுதியற்றினு... *
னென்பிதாவொடுபிறந்துமின்றளவுமென்கையோதனமருந்திடு ..*
மன்புதானுடையனல்லனென்பகைதனக்குமுற்றபகையல்லவோ..*

(எ-று) வலுமையினாலேபூமியைக்கிரகிக்கவேண்டுமென்றுநினைத்துஎன்வீட்டுப்போசனத்தைநீக்கினகோபாலகிருஷ்ணனானவன் தன்னுடைய சேனைகளோடும் இனிதாகப்புசிக்கும்படிவிதுரன்தன்வீட்டிலே இனிமையுள்ள அமுதுசெய்வித்தான் என்தகப்பனோடு பிறந்தும் இன்றளவும் என்கை யன்னத்தைச்சாப்பிட்டும்என்னிடத்திலே எவ்வளவும் அன்பில்லாதவனாயிருந்தான். எனக்குவந்த பகையாளி தனக்குவந்தபகையாளியல்லவோவென்றான் துரியோதனன்.எ-று.

முதல்விழைந்தொருவனுடனிசைந்தபொருள்பற்றியின்புறமுயங்கினு, மதிகமென்றபொருளொருவன்வேறுதரினவனையேயொழிய லறிவரோ, பொதுமடந்தையர்தமக்குமண்ணிலிதுபுதுமையல்லவவர்புதல்வனும், விதுரனென்றவனொடுறவுகொண்டதோர் வியப்பையென்சொலிவெறுப்பதே...................... *

(எ-று)வேசையரானவர் முன்னே ஒருவன்கொடுத்த திரவியத்தைப்பற்றி அவனுடன் இன்பங்கொண்டுகூடினாலும் மற்றொருவன் அதிகதிரவியத்தைக்கொடுப்பானேயானால் அவனைத்தவிரவேறொருத்தரை அறிவார்களோ பூமியிலே அவர்களுக்கு இதுபுதுமையல்ல, ஆகையால் அப்படிப்பட்டவள் புத்திரனாகிய விதுரனென்றவனோடுறவுகொண்ட அதிசயத்தை நான் என்சொல்லிவெறுப்பதென்றான துரியோதனனென்றவாறு. (௱௨௮)

இன்னவாறிவனுரைத்தபோதவனெழுந்திருந்துவசையெனை நீ, சொன்னவாய்க்குருதிசோரவாள்கொடுதுளைத்துநின்முடிதுணிப்பன் யான், மன்னரானவரில்குருகுலத்தொருவன்மைந்தனுருயிராவௌவிலு, னென்னவானவர் நகைப்பரோயெனையுரைத்தநாவுடனிருத்தியோ........................................ *

(எ-று) இந்தப்பிரகாரம்துரியோதனன்சொன்னபோது அந்தவிதுரனெழுந்து என்னைக்குற்றஞ்சொன்னவாயிலேரத்தம்ஒழுகவாளாயுதங்கொண்டுதுளைத்துஉன்தலையைவெட்டுவேன் ஆனால்குருகுலராஜாக்களிலே ஒருவன்பிள்ளையுயிராக்கொன்றானென்று தேவர்கள்

நகைப்பார்களேஅல்லாவிட்டால்என்னைவசைசொன்னநாவுடனேயி ருப்பையோவென்றுபின்னுஞ்சொல்லுவானென்றவாறு. (௱உகூ)

ஈண்டவர்க்குதவியாயதூதெனவிசைப்பவர்க்குலகமெங்கணு... ம்*
நீண்டவர்க்குதவியாயினேனெனநினைத்துநீயெனையடர்த்தியே ...*
மாண்டவர்க்குதவியாயபேரறமுமிசையுமாண்மையும்வளர்த்திடும்*
பாண்டவர்க்குதவியாகிலென்னைமுடிமன்னரானவர்பழிப்பரோ.. *

(எ-து) இவ்விடத்திலேபஞ்சபாண்டவர்களுக்குஉதவியாகியதூத னென்றுசொல்லப்பட்டவராயும் உலகமெல்லாம்வளர்ந்தவராயுமிரு க்கும் ஸ்ரீகிருஷ்ணதேவருக்குவிருந்துசெய்து உபகாரமாகினேனெ ன்றுநினைத்து என்னைநீஉதாசினப்பேசிக்கோபித்தாயே மாட்சிமை யையுடையபெரியதபோதனர்க்கும்முனிவருக்குமுதவியாகியபெரி யதருமமுங்கீர்த்தியும்சௌரியமும்வளர்த்திடுகின்ற பஞ்சபாண்டவர் களுக்குஉபகாரியானால் என்னைகிரீடந்தரித்த அரசரானவர்கள்பழிப் பாரோவென்று பின்னுஞ்சொல்லுவான் விதுரராஜனென்றவாறு.

சொல்லிரண்டுபுகலேனினிச்சமரினின்றுவெங்கணைதொடேனென *
வில்லிரண்டிலுமுயர்ந்தவில்லதனைவேறிரண்டுபடவெட்டினான் ... *
மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்துதன்......*
னில்லிரண்டுதினம்வருகைக்குலகிலெண்ணிலாததவமெய்தினான்... *

(எ-து) இரண்டுசொற்சொல்லேன் இனியுத்தத்திலேநின்றுவெவ் வியபாணந்தொடுத்திடேனென்று சிவன் விஷ்ணுவென்னுமிரண்டு பேர் வில்லினுமுயர்ந்த தன்னுடையவில்லை இரண்டுதுண்டாக வெ ட்டினான் முன்னாலேகஞ்சனால்விடப்பட்ட இரண்டுமல்லரையும் பல பத்திரரும் ஸ்ரீகிருஷ்ணருமாக வந்துவென்ற மகாவிஷ்ணுவானவர் தன்வீட்டில் இரண்டுநாள் விருந்துண்டிருப்பதற்குஉலகத்தில் எண் ணிலாததவத்தைப்பெற்றிருந்த விதுரராஜனென்றவாறு. (௱௩க)

அந்தவில்லினைமுறித்தவில்விதனதாலையம்புகுதவச்சுதன்......... *
றந்தவில்லுமரன்விலலுமொப்பதொருதாமவில்லினைமுறிப்பதே *
முந்தும்வில்லியரிலெண்ணுவில்லுடையவிஜயன்வந்தமரின்முடுகினு
லெந்தவில்லியெதிர்நிற்கவல்லனினியென்றுகாவலரிரங்கினர்...... *

(எ-து) அந்தவில்லையொடித்துப்போட்டவிதுரன் தன்னுடைய அரமனைக்குப்போக அப்போது மகாவிஷ்ணு வில்லும் உருத்திரன்

அதுவில்லும்ஒப்பதாகிய வெற்றிமாலையையணிந்த வில்லைமுறிப்ப
தென்னவிலவீரரில்முன்னேஎண்ணத்தக்கவில்லையுடையஅர்ச்சுனன்
வந்தியுத்தத்திலே ஆரம்பித்தால் இனி எந்தவில்லையுடையவன் அவ
னெதிரேநிற்கவல்லவனென்று இரங்கினார்கள் இராஜாக்களெல்லாமெ
ன்வாறு. (௱கூ௨)

காரனைத்தும்விடுதாரையென்னபலகணைகளேவியமர்கருதும்வில் *
வீரனைப்பழுதுரைத்தநீபகையையெங்ஙனேதணியவெல்குவாய்.. *
பாரனைத்துமினியைவராளும்வகைபண்ணுவித்தனையழிந்ததுன்...*
பேரனைத்துமெனவுள்ளழிந்துசிலபேசினானுயர்பிதாமகன்.......*

(எ-து) மேகமெல்லாம்விடப்பட்டதாரையைப்போலஅநேகபா
ணங்களையேவியுத்தஞ்செய்யும்வில்லையுடையவிதுரனைப்பழுதுசொ
ன்ன நீ பகையை எப்படி அடங்கச்செயிப்பாய் உலகமெல்லாம் இனி
ப்பஞ்சபாண்டவர்க ளாளும்படி செய்வித்தாய் உன்பேரெல்லாம்
இன்றே டழிந்ததென்று மனநொந்து சிலபேச்சுகள்பேசினார் பீஷ்
மாசாரியரென்றவாறு. (௱கூ௩)

பிதாமகன்பரிவுடன்முனிந்துசிலபேசநாசமுறுபேரினான்.........*
விதாரமார்பனுயர்விதுரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லையோ... *
வுதாரசிலனுயரங்கர்கோன்வரிவிலொன்றுமேயமையுமுற்றெழும் *
பதாதியோடமரிலைவரும்படமலைந்திடப்பரணிபாடவே..........*

(எ-து) இப்படி பீஷ்மாசாரி அன்புடனேகோபித்துச் சிலவார்த்
தைகள்பேசத் துரியோதனனானவன்பார்த்து.விசாலமாகியமார்பை
யுடைய உயர்ந்தவிதுரனல்லாமல் வில்லிலேவல்லவீரர் பிறரொருவ
ருமில்லையோ மிகுந்தெழுகின்ற சேனைகளோடு யுத்தத்திலே ஐவரு
மிறக்கும்படியுத்தஞ்செய்யவும் பரணிபாடவும் உதாரணகுணத்தை
யுடைய உயர்ந்த கர்னன்வில் லொன்றுமேபோதுமென்று னென்ற
வாறு. (௱கூ௪)

நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனிருக்கநிகரற்றவன்.......... *
சேயிருக்கவிறன்மன்னரிப்படிதிரண்டிருக்கவெதிர்செல்றுநீள்...*
வேயிருக்குமிதழிடையனுக்குநல்விருந்துசெய்தவன்வெறுக்கிலென்
போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைமலைந்துநம்மொடெவர் போர்
[செய்வார்.

(எ-து)பீஷ்மாசாரியாராகிய நீரிருக்கத்துரோணசாரியரிருக்கநிக
ரில்லாதஅவர்குமாரன்அசுவத்தாமாவிருக்கவெற்றியையுடையஅரச

ர்கள் இப்படி திரண்டிருக்க, நீண்டமூங்கிற்குழலைவாயிலே வைத்து
இசைபாடுகின்ற இடையனுக்கு எதிர்கொண்டுபோயழைத்துவந்து
நல்லவிருந்திட்டவிதுரன் வெறுத்தாலென்ன, போயிருந்தாலென்ன
வில்லையொடித்தாலென்ன, வெற்றிமாலையைச்சூடி நம்மோடார்போ
ர்செய்வார்களென்றான் துரியோதனனென்றவாறு. (௱௯௫)

என்றுகூறவிறலங்கர்பூபதியும்யாவிருக்கவிகல்விஜையனைச்......*
சென்றுசீறியுயிர்கொள்ளவல்லவர்கள்யாவரொன்றுநவிசெட்புவீர் *
கன்றினல்விளவெறிந்தகள்வனிவனின்றுதேர்தனிகடாவினும்...[மைய
அன்றுபோரினிடை காணலாகுமென தாடல்வெஞ்சிலையினுண்

(எ-து) இப்படி துரியோதனன்சொல்லக்கேட்டகர்னமகாராஜன்
சொல்லுவான் யாரொருவனிருக்கச்சேபகைகொள்ளும்அர்ச்சுனனை
அடுத்துச்சீறி உயிரைக்கொள்ளவல்லவர் யாரொன்றுசொல்லுவீர்கள்
கன்றினலேவிளாம்பழத்தையுதிர்த்ததிருடனாகிய கோபாலகிருஷ்ண
னேயிருந்து அவனுக்கு ரதசாரத்தியஞ்செய்தாலும் அன்றுயுத்தத்
திலே என்வில்லினுடைய ஆண்மையைக்காணலாமென்றுபின்னுஞ்
சொல்லுவானென்றவாறு. (௱௯௬)

அம்பரத்தவருடன்றுசீறினுமொரம்பிலேயழிவர்நின்னம்யான்...*
வெம்பணிப்பகழியேவிலாவிபுடன்மீளுவானமரில்விஜயனே.....*
விம்பரிற்புகலவிருதளத்தினுமெனக்குநேரொருவரில்லையென்....*
றும்பர்கற்பகமுதாணவண்மையிலுயர்ந்தவீரனிலையுரைசெய்தான்

(எ-து) தேவர்கள்கோபஞ்செய்து சீறினும் ஒரு அஸ்திரத்தினு
லழிந்துபோவார்கள். இதுசத்தியமாகும் யான்வெப்பத்தையுடைய
நாகாஸ்திரத்தை ஏவினேனாகில் அர்ச்சுனன்யுத்தத்திலேஉயிரோ
டுதிரும்புவானோ இரண்டுதிறத்துச்சேனைகளிலும்இவ்வுலகத்தில் என
க்குநிகராகியவர்களொருவருமில்லையென்றுசொன்னான் தெய்வலோ
கத்திலிருக்கும் கற்பகவிருக்ஷமுமநாணும்படிக்கொடையினுலுயர்
ந்த கர்னமகாராஜனென்றவாறு. (௱௯௭)

திசையனைத்தையும்வளைந்ததானவனையிரவிவந்தொரு திசையின்வா
றிசிஎனப்பொருதுவானவர்க்கரசளித்துவந்தவிறலினீர்மையான் [யி
விசையனுக்குநிகர்நீகொலோகடவுள்வெண்மதிக்குநிகர்வெள்ளியோ

அசைவில்விற்றொழிலும்வல்லையோவெனவொரசைவிலாதவனரற்றி
[னான்.

(எ-து) எட்டுத்திசையிலுஞ்சூழ்ந்துகொண்டஅவுணர்களைச் சூரியனுதயமாகிய திக்கிலேகெடுகின்ற இருளைப்போல யுத்தஞ்செய்து தேவர்களுக்கு அரசுகொடுத்துவந்த வெற்றியையுடைய அர்ச்சுனனுக்கு நீயொப்பாவையோ, தெய்வத்தன்மையுள்ள வெள்ளிய சந்திரனுக்குச் சுக்கிரன் ஒப்பாகுமோ, அசைவில்லாத வில்யுத்தத்திலும் வல்லமையுடையையோவென்று ஒருதளர்ச்சியுமில்லாத பீஷ்மாசாரியர்சொலவினானென்றவாறு. (௱௯௮)

அவன்மொழிந்தமொழிதன்செவிப்படலுமருகிருந்தமுதருந்தி
யிவனுடன்சிலர்பகைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்பினு
மிப்புவனமொன்றுபடவரினுமென்றனொடுபொருவராகிலெதிர்போ
ரவிடாய், சிவனுமென்கணையையஞ்சுமென்றுநனி சீறினனிரவிசிறு
வனே........................................................ *

(எ-து) அந்தபீஷ்மாசாரியர்சொன்னசொல் காதிலேபட்டமாத்திரத்தில் சம்பந்தியிலேயிருந்து அன்னத்தையுண்டுநீர்துரியோதனனுடன் சிலபேர்பகைத்தால் அவர்களுடைய கீர்த்தியையும்வல்லமையையும் எடுத்துப்பேசினீர் திரிலோகத்தாரும் ஒன்றாய்க்கூடிவந்தாலும் என்னோடுயுத்தம்பண்ணுவார்களோ ஆனால்விட்டுப்பாரும்ஈசுரரும் என்னுடையபாணத்துக்குப் பயப்படுவாரென்று மிகவுஞ் சீறினான் சூரியன்புதல்வனான கர்ணமகாராஜனென்றவாறு. (௱௯௯)

இரவிமைந்தனொடுகங்கைமைந்தனொருவீரவாய்மையுமிசைத்திலன்
பொரவறிந்திடுதுமன்றுவெஞ்சமரிலென்றெழுந்துநனி போயினன்
அரவவெங்கொடியுயர்த்தகோவுமிகலரசருக்குவிடையருளினன்..*
விரவுபைந்துளபமாலையான்விதுரன்மனையினுற்றதுவிளம்புவாம்*

(எ-து) அப்படிசொல்லிய சூரியன்புதல்வனான கர்ணனுடனேகங்காபுத்திரனான பீஷ்மாசாரியர் ஒருவீரவார்த்தையுஞ்சொல்லவில்லையேனெனில், அன்றுவெவ்வியயுத்தத்தில் சண்டைபண்ணும்போதுதெரிந்துகொள்ளுவோமென்றுபோனார் அப்போதுசர்ப்பக்கொடிபடைத்த துரியோதனனும் வலிமையுள்ள அரசர்களுக்கெல்லாஞ் செலவுகொடுத்துவிட்டான் முன்புபசியதுளபமாலையணிந்தஸ்ரீகிருஷ்ணதேவர்விதுரன் அரமனைக்கெழுந்தருளியதைச்சொல்லுவாமென்றவாறு

[ வேறு. ]

பொருசிலைமுறித்தவீரன்கோயிலிற்புகுந்துநேமிக்... *
குரிசிலைவணங்கிபாங்கணிருப்பவக்குரிசினோக்கி... ... *
யிருசிலையுண்டென்றிந்தவிருநிலத்தியம்பும்வில்லி......*
லொருசிலைமுறித்தசீற்றமென்கொலோவுரைநீயென்றான்.

(எ-து) விதுரமஹாராஜனானவன் அரமனையிற்புகுந்துசக்ராயுதத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவனைவணங்கிஅங்கேயிருக்கஅவர்பார்த்து இரண்டுவிற்களுண்டென்று இந்தபெரியபூமியிலே சொல்லப்பட்டவில்லில் அர்ச்சுனன்வில்லிருக்க உன்னொருவில்லையொடித்தகோபத்திற்குக்காரணமென்னவென்றுசொல்லென்றானென்றவாறு.௱௬௩.

ஆவதுகருதானாகிலமைச்சர்சொற்கேளானாகில்...*
வீவதுகுறியானாகில்விளைவதுமுணரானாகில் .... *
நாவதுகாவானாகிலவனுக்காநடந்துபோரிற்......*
சாவதுபழுதென்றன்றேசகத்துளார்சாற்றுகின்றார்.

(எ-து) ஒருவன்தனக்குஆகவேண்டியகாரியத்தை நினையானாகில் மந்திரிகள்வார்த்தையைக்கேளானாகில் கெடுவதுநினையானாகில் விளைவதைஅறியானாகில் நாவைக்காப்பாற்றானாகில் அவனுக்காகப்போய் யுத்தத்திற் சாவதுபழுதென்றல்லவா, பூலோகத்திலுள்ளவர்கள்சொல்லுகின்றார்களென்றவாறு. (௱௬௨)

செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணார்... *
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர். *

(எ-து) செல்வம்வந்துசேர்ந்தகாலத்தில் தெய்வத்தையுங்கொஞ்சமாவதுவணங்கார் சொல்லவேண்டியவைகளை அறிந்துசொல்லமாட்டார் பந்துவையுஞ்சினேகிதனையும்பாரார்கள்ஜெயிக்கிறதேநினைக்கிறதல்லால் நமக்குப்பகைவர் வலுமையுடையரொன்றுநினையார் தீவினைவிளைவதும்பாரார்பூமியிலேவாழ்கின்றமனிதரொன்றான்விதுரராஜனென்றவாறு. (௱௬௫)

நினைக்கவுந்தொழவுமெட்டா நீயெழுந்தருளப்பெற்றுந்
தனக்கிதுதகுதியென்றுதமருடன்வாழவெண்ணான்... *

மனக்கடுங்கனலினுன்றன் மனத்தினுலுரைத்தபுன்சொல்
எனக்கிசையாமல்யானுமிருஞ்சிலையிறுத்ததென்முன் *

(எ-து) நினைக்கவுந்தொழவும் எட்டாதநீரோ ப்ரத்தியக்ஷத்தில்வ ழுந்தருளப்பெற்றிருந்தும் தனக்குஇது தக்கதென்று ஞாதிகளுட ன்வாழ்தற்கு ஆலோசி யான் மனத்திலிருக்கும் கோபாக்கினியையு டைய துரியோதனன் கர்வத்தினுற்சொல்லிய அற்பவார்த்தைஎனக்கு ப்பொருந்தாமல்யானும்பெரியவில்லை ஒடித்தேனென்முன் விதுர ராஜனென்றவாறு. (௱௪௪)

மாயனுமகிழ்ந்துநோக்கிமாசுணமுயர்த்தகோமான்,போ
யருஞ்சேனையோடும்போர்க்களங்குறுகும்போது,நீயவ
ணருகினில்லாதொழியிலுன்னேயமைந்தர்,தாயமுஞ்செ
ல்வமுற்றுந்தரணியும்பெறுவரென்முன்............ ...*

(எ-து) அப்போது ஸ்ரீகிருஷ்ணதேவர்மகிழ்ந்து விதுரனைப்பார் த்துத் துரியோதனன் சேனையுடனே யுத்தகளத்துக்குவரும்போது நீஅவனிடத்திலில்லாமல்நீங்கினுல் உன்னுடையநேயத்தையுடையகு ந்திமாதேவிபுத்திரராகியபாண்டவர்கள் தங்கள்பங்கும் பாக்கியமும் பூமியும் பெறுவார்களென்முரென்றவாறு. (௱௪௫)

எற்றியநறுநெய்வீசியிந்தனமடுக்கினுலுங்,காற்றுவந்துறு
தப்பாதுகடுங்கனல்கதுவாதன்றே, நீற்றணிநிமலனன்ன
நின்கைவில்லிற்றதாகிற், சீற்றவேலரசன்சேனைதென்புல
மடைதறிண்ணம்.................................... ........*

(எ-து) அதிகமாகிய நல்லநெய்யைவிட்டு விறகை யடுக்கினுலுங் காற்றுவந்துசேராதபோது கடிய அக்கினிமூளாதல்லவா பரமசிவ னுக்குச்சமானமாகிய உன்கைவில் லொடிந்ததானுல் கோபத்தையு டையவேலாயுதமேந்திய துரியோதனன் சேனைகள் யமலோகத்தை யடைவதுசத்தியமென்றவாறு. (௱௪௬)

பன்னியபனுவல்கேள்விப்பயனுகர்மனத்தினுனே, மன்ன
வன்மொழிந்தவெல்லாம்பொறுத்தியென்றருளிமாயோ
ன்,அந்நகர்தன்னில்வண்மையழகருளாண்மையேசுங்,கன்
னனைப்பயந்தகாதற்கன்னிதன்கோயில்புக்கான் ... ...*

(எ-து) பன்னப்பட்ட நூல்களின் கேள்விப்பயன் அறிந்தமனமு டையவிதுரராஜனைத் துரியோதனன்சொல்லியபேச்செல்லாம் பொ றுக்கக்கடவையென்று சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர் அந்த நகரத்திலே கொடையையும் அருளையும் ஆண்மையையுமுடையகர்ணனைப்பெறத் ஆசையுள்ள குந்திமாதேவியினுடைய வீட்டுக்குப்போனார் எ-று.

மண்டலமதியமன்ன மாசறுமுகத்தினாளுந், திண்டிறன்ம
ருகன்றன்னைச்சென்றெதிர்கொண்டுகண்டு வெண்டிரைம
கரவேலைவிரிபுனன்முகந்துதோன்றுங், கொண்டலைமகிழ்
ந்துகாணுங் குளிர்பசுந்தோகைபோன்றாள்...........*

(எ-து) பூலோகசந்திரன்போல் குற்றமற்ற முகத்தையுடையகுந் திமாதேவியும்மிகுந்தவலிமையுள்ளமருமகனாகிய ஸ்ரீகிருஷ்ணனை எ திர்கொண்டுகண்டு வெள்ளிய அலைகளையும்மகரமீன்களையுமுடையச முத்திரத்தினது விரிந்தஜலத்தையுண்டுவருகின்ற மேகத்தைமகிழ்ந் துபார்க்கின்றகுளிர்ந்த பசியமயிலையொத்தாளென்றவாறு, (௱சஅ)

யானுறையில்லில்வந்த தென்னமாதவமென்றேத்திக், கா
னுறைமைந்தர் தம்மைக் கண்டனள்போலவாகித், தேனு
றைதுளவினான்றன் செய்யமாமுகத்தை நோக்கி வானுறை
புரிசைமூதூர்வந்ததென்னருடியென்றாள்..............*

(எ-து) நானிருக்கும்படியாகியவீட்டிலெழுந்தருளியதென்னமா தவமென்றுவணங்கிக் காட்டிலேயிருக்கின்றபிள்ளைகளைக்கண்டவள் போலமனமகிழ்ந்து தேன்பெருகுகின்ற துளபமாலையணிந்தஸ்ரீகிரு ஷ்ணனுடையதிருமுகத்தைப்பார்த்து ஆகாயமளாவிய மதிலையுடை யஇவ்வூருக்குவந்தகாரியமென்ன அருளிச்செய்யுமென்றாள் குந்திமா தேவியென்றவாறு. (௱சகூ)

நின்பெரும்புதல்வர்சொல்லநெடும்புனனாடுவேண்டி, வன்
பணியுயர்த்தகோமான் மனக்கருத்தறியவந்தேன், றென்
புலவேந்தன்வெஃகச்செருத்தொழில்புரிவனென்று, னெ
ன்பாலசொல்லிநாளையெதிர்க்கவேயிசைந்தேனென்றான்

(எ-து) உன்னுடையபெருமைபொருந்திய குமாரர்கள்சொல்ல நெடியநீர்வளத்தையுடைய நாட்டைவேண்டித் துரியோதனனுடை

யஉள்ளக்கருத்தையறியும்படிவந்தேன்தென் திசையிலிருக்கின்றகூற்றுவன்உயிர்களை விரும்பியுண்ணயுத்தஞ்செய்வதற்குச் சம்மதித்தான் அவனுடன் பலவார்த்தைகள்பேசி என்னபிரயோசனம்நாளையுத்தஞ் செய்யும்படிசம்மதித்து வந்தேனென்றார்ஸ்ரீகிருஷ்ணதேவர். எ று.

என்றலுங்குந்திசாலவிரங்கினளெதிர்ந்தபோரில்.......*
வென்றிடுவார்களாரோ விதியினாலமர்க்களத்திற்.......*
பொன்றிடுவார்களாரோ வென்றுளம்புலர்ந்துதொந்தாள்
அன்றவடன்னைத்தேற்றியாழியானுரைக்கலுற்றான்... *

(எ-து) இப்படியென்று சொன்னமாத்திரத்திலேகுந்திமாதேவி மிகவும் இரக்கமுற்றவளாய் எதிர்த்து செய்கின்ற யுத்தத்திலேஜெயிப்பவர்கள் யாவரோ விதியினால் யுத்தகளத்திலே இறப்பவர்கள்யாவரோவென்று மனம்வாடிவருந்தினாள் அன்று அவளுக்குத் தேறுதல் சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லத்தொடங்கினாரென்றவாறு. ௱௰௧

தன்மைநானுரைக்கக்கேணின்றந்தைதன்மனையினீயுங்,க
ன்னியாயிருந்துவாழுங் காலையோர்முனிவன்வந்து சொ
ன்னமந்திரமோரைந்தி னொன்றில்வெஞ்சுடரோன் றன்
னை, முன்னினையவனுமன்றுவந்துநின்முன்புநின்றான் *

(எ-து) அந்தத்தன்மையை நான்சொல்லக்கேட்பாய் உன்தகப்பன்வீட்டிலே நீ கன்னிகையாயிருந்து வாழுங்காலத்தில்துருவாசமுனிவர்வந்து அனுக்கிரகஞ்செய்தஐந்துமந்திரங்களில்ஒருமந்திரத்தால்சூரியனை நினைத்தாய் அவனும்வந்து நின்னெதிரேநின்றான், எ-று*

கதிரவனருளினாலோர்கணத்திடைக்காதல்கூர.........*
மதலையங்கொருவன்றன்னைப் பயந்தபின்வடுவென்றஞ்சி,
மிதவையம்பேழைதன்னிற் பொதிந்துநீவிடவப்போதந்
நதியருமகவைக்கங்கை நதியிடப்படுத்ததன்றே... ...*

(எ-து) இப்படிக்கு வந்தசூரியனது கிருபையினாலே ஒருக்ஷணத்திலேஆசைஅதிகரிக்க அங்கே ஒருபிள்ளையைப் பெற்றபின்பு குற்றமென்று நினைத்து நீரிலேமிதக்கப்பட்ட பெட்டியிலேகுழந்தையை வைத்து நீஆற்றிலேவிட்டாய் அப்போது அந்த ஆறுகங்கையிலே கொண்டுபோய்விட்டதென்றவாறு.

காதனின் புதல்வன் றன்னைக்கண்ணிலாவரசன்போற்றேர்
ச், சூதன்வந்தெடுத்துக்கொண்டு சுதனெனவளர்த்தகாலை
ஆதவனிவனையாருங்கர்னனென்றழைக்கவென்றான், மு
தையும்விசும்பிற்சொன்னநாமமேதக்கதென்றுன் .. *

(எ-து) அப்பெட்டியிலே வைத்து நதியில்விட்ட ஆசையுள்ளஉன் பிள்ளையைத் திருதராட்டிரனுடைய தேர்ப்பாகன்வந் தெடுத்துக் கொண்டுபோய்ப் பிள்ளையாகவளர்த்தகாலத்தில் சூரியன் இவனைஎவர்களும் கர்னனென்று அழையுங்களென்று சொன்னுன் அவன்தகப்பனும் அசரீரியாய்ச்சொல்லிய நாமதேயமேதகுதியானதென்று சொன்னுனென்றவாறு. (௱ருச)

பண்புடைக்குமரன்கற்றபடைத்தொழில்பலவுங்கண்டு, ந
ண்புடையுரிமையெல்லாநல்கிமாமுடியுஞ்சூட்டி, வண்ப
ணியுயர்த்தகோமான் வாழ்வவர்க்களித்தான்மற்றைத், தி
ண்பரித்தேர்வல்லோரி லவனையார் ஜெயிக்கவல்லார் ...*

(எ-து) குணத்தையுடைய அந்தப்பிள்ளைகற்றிருந்த ஆயுதத்தொழில் அநேகமும்பார்த்துசினேகிதருடையஉரிமையையெல்லாங்கொடுத்துகிரீடமுந்தரித்துத் துரியோதனனுனவன்செல்வத்தையுங்கொடுத்தான் வலிமையுள்ள புரவிகள் பூட்டிய இரதங்களுடையஅரசரில் அந்தக்கர்னனைஜெயிக்கவல்லவர் யாவரென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௱ருரு)

அந்தநின்மைந்தன்றனேயருஞ்சிலைவிஜயனேடு, வந்
தெதிர்மலையநின்ற ஞறவுமற்றறியமாட்டான், சிந்தையி
லையந்திர விதனைநீதெளியச்சொல்லிக், கொந்தவிழலங்க
லானைக்கூட்டுகவினைவிலென்றான்.....................*

(எ-து) உன்பிள்ளையாகிய அந்தகர்னன் வில்லிலேவல்லவனுகிய அர்ச்சுனனேடுவந்து யுத்தஞ்செய்யவிருக்கிறன் தனக்குத்தம்பியென்றறியான் மனத்திலிருக்கும் சந்தேகந்தீர இச்செய்தியை நீதெளியும்படிச்சொல்லிக் கர்னனைசீக்கிரத்தில் ஒன்றுகக்கூட்டிவிப்பாயென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௱ருசு)

தம்பியனைத்துபேருந்தனித்தனியேவல்செய்யவம்பவிழ
லங்கலோடுமாமணிமகுடஞ்சூட்டி, யம்புவிமுழுதநீய

யாளலாம்வருகவென்று, லும்பர்காவனையகையா னுன
துளாமறுத்தானுகில்.......................................*

(எ-து) தம்பிமாராந்துபேரும் வெவ்வேறு ஏவற்பணி செய்ய வர்சனைவீசுகின்ற மாலையுடனே ரத்தினம் பதித்த முடிசூட்டிக்கொண்டு பூமிமுழுவதும் நீயேயாளலாம் வாவென்றுசொன்னால் தெய்வலோகத்திலிருக்கும் பஞ்சதருவுக்குச்சமானமாகிய தியாகத்தைத் தருங்கையையுடைய கர்னன்சம்மதிப்பான் அப்படிசம்மதியாமல் மறுத்தானுகிலென்றவாறு. (ருருஎ)

எரியமுதருந்தக்கானமெரித்தநாளகன்றுபோன.....*
வரவினைபங்கர்கோமானுயுதமாகக்கொண்டான்... .... *
வரிசிலைவிஜையன்றன்மேன் மறுகணைதொடுக்காவண்ண
மொருவரம்வேண்டுகென்று னுற்றவர்க்குறுதிசெய்வான்

(எ-து) அக்கினிபொசிக்கும்படி காண்டாவனந் தகித்தநாளில் நீங்கியசர்ப்பத்தைக் கர்னன் அம்பாக்கிக்கொண்டான் நீண்டவில்லையுடைய அர்ச்சுனன்மேல் ஒருகணையே யன்றி மறுகணைதொடுக்காத விதம் ஒருவரமாத்திரம் வேண்டி வாங்கிக்கொள்வாயென்றார் அடுத்தவர்களுக்கு உறுதிசெய்யும் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (ருருஅ)

மன்றலந்தெரியல்வெய்யோன் மதலையென்மைந்தனென்ப
தன்றெனக்குரைத்தாயாகிலவனுடனணுகவொட்டேன்.. *
சென்றுயிரொழிக்குமாறுசெருவினைவிளைத்துப்பின்னை *
யின்றெனக்குரைத்தையையாவென்னினைந்தென்செய்தாயே

(எ-து) வாசமுள்ளமாலையணிந்த சூரியன் புதல்வனுகிய கர்னன் என்பிள்ளையென்பது அன்றே எனக்குச்சொன்னீரானால்அந்தத்துரியோதனனுடனேசேரவொட்டேன்யுத்தகளத்துக்குப்போய் உயிரையொழிக்கும்படி யுத்தத்தை மூட்டிவிட்டுப் பின்பு இன்றுஎனக்குச்சொன்ன ையையனே என்னநினைத்துஎன்னசெய்தாயென்றாள் குந்திமாதேவியென்றவாறு. (ருருகூ)

கான்பட்டகனலிற்பாயுங்கடுங்கணைவிலக்கவெண்ணில்...*
வான்பட்டபுரவித்தேரோன்மகன்பமிமகவான்மைந்தன்

றுன்பட்டுமுடியுஞ்சென்றதடாதினியிருந்தேனாகில்...*
யான்பட்டகொடுமைநன்றென்றென்பட்டாளிரங்கிவீழ்ந்தாள்

(எ-து) காண்டாவனத்து அக்கினியிலிருந்துவந்தவேகத்தையுடையசர்ப்பக்கணையைவிலக்க நினைத்தேனேயானால் சூரியன் புதல்வனாகிய கர்ணன் இறந்துவிடுவான் நான்போய் அதைவிலக்காமல் விட்டேனேயானால் இந்திரன் புதல்வனாகிய அர்ச்சுனன் இறந்துவிடுவான் யான்படுகின்றகொடுமைநன்றாயிருக்கின்றதென்றுஎன்னபாடுபட்டாள் இரக்கமுற்றுவீழ்ந்தாள் குந்திமாதேவியென்றவாறு, (௱௯௰)

தேக்குந்தியகிலுஞ்சாந்துஞ்சிந்துநீர்நதிசூழ்செல்வக்..*
கோக்குந்தியரசன்பாவைகுலைந்தழுங்கொடுமைகண்டு *
மீக்குந்தியுறிகடோறும்வெண்ணெயுந்தயிருமுண்ட.. *
வாக்குந்திமலரோன்பின்னுமனந்தளர்வகற்றினானே...*

(எ-து) தேக்கு - அகில் - சந்தனமுதலிய மரங்களைத் தள்ளிக்கொண்டுசெல்லுகின்ற நீரையுடைய சிந்துநதிசூழ்ந்தகுந்திதேசத்து அரசன்புத்திரியானவள் குலைகுலைந்து அழுகின்ற கொடுமையைப்பார்த்துமேலே எட்டி உறிகளிலெல்லாம் வெண்ணெயுந் தயிரும்உண்ட வாயையும் நாபிக்கமலத்தையுமுடைய ஸ்ரீகிருஷ்ணதேவர் மறுபடியும்மனத்தளர்ச்சியை நீக்கினானென்றவாறு. (௱௯௧)

பைவருந்தலைகளைந்துபடைத்தபன்னகமேபோல......*
வைவருமடிதனன்றோவங்கர்கோன்மடிதனன்றோ ... *
வுய்வருஞ்சமரிலாவியொருவர்போயொருவருய்யா...*
ணாவருத்துயரமாற்றிநடப்பதேகருமமென்றான்......*

(எ-து) படத்தையுடைய ஐந்துதலைகளைப்படைத்துள்ள ஒருசர்ப்பம்போலப்பஞ்சபாண்டவர்களும்இறத்தல்நல்லதோ, அங்கதேசத்துக்கதிபதியாகியகர்ணனொருவனுமிருப்பதுநல்லதோ; பிழைத்தற்கரியயுத்தத்தில் ஐந்துபேர்களுக்குள்ளேஒருவரிறந்துமற்றவர்களிருக்கமாட்டார்கள்ஆகையால்நைதற்குவருகின்றதுக்கத்தைநீக்கிக்கொண்டுபோவதேகாரியமென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௱௯௨)

காளமாறுகிலின்மேனிக்கரியநாயகனுந்தேற்றி.......*
மீளமாதவத்தின்மிக்கவிதுரன்வாழ்மனையினெய்த....*

வாளமால்வரையில்வெய்யோன்குறுகினன்வருணன்றிக்கி
னிளமால்யானைநெற்றிநிறைத்தசெந்திலகம்போன்றே.*

(எ-து) கரியமேகவண்ணரான ஸ்ரீகிருஷ்ணதேவருந் தேறுதல் சொல்லிமறுபடி மகத்தாகியதவத்திலே மிகுந்த விதுரன்வாழ்கின்ற அரமனைக்குப்போக அப்போது சக்கிரவாளகிரியில் சூரியன் அஸ்தமயமானான் மேற்குத்திசையி லிருக்கின்ற பெரிய யானையினுடைய நெற்றியிலிட்டசிந்தூரப்பொட்டுப்போலென்றவாறு. (ரசுரு)

நாற்றிசையுலகுதன்னினான்மறைபுணர்ந்தோர்யாரும் *
போற்றிசைமாலையென்னும்பொற்புடையணங்குவைக*
மாற்றிசைவிலாதசெம்பொன்மண்டபந்தன்னிலாதி... *
மேற்றிசைக்கடவுளிட்டவெயின்மணிப்பீடம்போன்றான்

(எ-து) நான்குதிசையுள்ள உலகத்தில் வேதப்பிராமணர்கள் யாவரும்போற்றுகின்ற கீர்த்தியையுடையமாலைப்பொழுதென்னும் அழகுள்ள மங்கையானவளிருக்க நிகரற்ற மாற்றுள்ள செம்பொன்னாற் செய்தமண்டபத்தில் சூரியனானவன் வருணனாலிடப்பட்ட ஒளியையுடைய ரத்தினபீடத்தையொத்தானென்றவாறு. (ரசுச)

கொண்டையென்சிறைவண்டென்னுங்கொழுனருக்கிடங்கொடாமல் *
முண்டகக்குலத்துமாதர்முகங்குவித்தாடிநிற்பக்................ *
கண்டெதிர்கொண்டுகாதக்கயிரவக்கணிகைமாதர்................*
வண்டுறைநின்றுதங்கள்வாய்மலர்ந்தழைக்கலுற்றார்.............. *

(எ-து) மெல்லிய சிறகைக்கொண்ட வண்டுகளென்னும் நாயகருக்குஇடங்கொடாமல்தாமரைக்கூட்டமாகியமங்கையர்கள் மலராகிய முகத்தைக்குவித்துக்கொண்டு கோபித்துநிற்கப்பார்த்து அல்லிகளாகியதாசிகள் எதிர்கொண்டு வளத்தையுடைய நீர்த்துறையிலிருந்து தங்கள்வாயைத்திறந்து அழைக்கின்றார்களென்றவாறு. (ரசுரு)

கானெலாமலர்ந்தமுல்லைகளைபிதெழுந்ததென்ன.....*
வானெலாம்வயங்குதாரைநிரைநிரைமலர்ந்துதோன்ற *
வேனிலான்விழவின்வைத்தவெள்ளிவெண்குடம்மென்னத்
தூநிலாமதியம்வந்துகுணதிசைதோன்றிற்றம்மா.....*

(எ-து) காடெல்லாமலர்ந்தமுல்லைகள் ஆகாயத்தின்மேலும்எழுந்ததென்றுசொல்லும்படி அவ்வாகாயத்தில் பிரகாசம்பொருந்தியதா

ரகைகள் கும்புகும்பாய்ப்பரவித்தோன்ற மன்மதனுடைய உச்சவத்திவ்வைத்தவெள்ளியாற்செய்த சுவேதகும்பமென்றுசொல்லப் பரிசுத்தமாகியகிரணத்தையுடைய சந்திரனெனவன்வந்து கிழக்குத்திசையிலுதயமாயிற்றென்றவாறு. (ாசுசு)

தூவியநிலவுதோன்றத்துணைவரைப்பிரிந்தோர்கண்கள்*
காவியுமாம்பலும்பைங்கருவிளமலரும்போன்ற... ...*
மேவியமகளிர்கண்கண்டீனெறிபரவையேழுந் ... ......*
தாவியவுழையுங்காதற்சகோரமும்போன்றமாதோ...*

(எ-து) பரிசுத்தமாகிய இயலையுடைய சந்திரனுதையமாகப்புருஷிவனநீங்கினமங்கையருடையகண்கள்நீலோற்பலமலரையும்அல்லிமலரையுங்கருக்கண்மலரையும்ஒத்தன புருஷரைக்கூடியமங்கையருடையகண்கள்மீனைவீசுகின்றஏழுசமுத்திரத்தையுந்தாவுகின்றமானையும் ஆசையையுடைய சகோரபக்ஷியையும் ஒத்திருந்தனவென்றவாறு.

அரவியலல்குலாருமகிழ்நருமன்புகூர...................*
விரவியவமளியெய்தவீதிமாநகரியெங்கும்.. ... ......*
பரவையினிமிர்ந்தவோதையமர்ந்தபின் பரித்தேர்வேந்த
னிரவிடைச்சூழ்ந்தவண்ணமின்னதென் றியம்புகின்றாம். *

(எ-து) பாம்பின்படம்போலும் நிதம்பத்தையுடைய மங்கையர்களும்புருஷர்களும் அன்புசிறக்கச் சப்ரகூடமஞ்சத்தையடைந்துவீதிகளையுடையபட்டணமெல்லாஞ்சமுத்திரம்போலமுழங்குமுழக்கம்அடங்கியபின்பு அர்த்தராத்திரியிலேதுரியோதனன் ஆலோசனைசெய்தவிதம் இன்னதென்றுசொல்லுவோமென்றவாறு. (ாசுஅ)

தந்தையுந்தம்பிமாருங்கன்னனுஞ்சகுனிதானுஞ்......*
சிந்தையிற்றெளிந்தகல்விச்செழுமதியமைச்சர்தாமும்*
முந்தரவுயர்த்தகோமானேவலான்முழுதுமெண்ணி...*
மந்திரமிருப்பான்வந்தோர்மண்டபங்குறுகினரோ.....*

(எ-து) தகப்பனாகிய திருதராட்டிரனும் தம்பிமார்களும் கர்னனும் சகுனியும் மனதிலேஆராய்ந்துதெளிவாகவறிந்தகல்விநிறைந்தசெழுமையுள்ளபுத்தியையுடைய மந்திரிகளும் சர்ப்பக்கொடியையுயர்த்த துரியோதனராஜன் ஏவலாலேமுழுதும்ஆலோசனைசெய்யும்பொருட்டு ஒருமண்டபத்திலேவந்திருந்தார்களென்றவாறு. (ாசுகூ)

நீதருமறிவல்லோரைச் செழுமதிக்குடையானோக்கிப்*
பாதகவனத்திற்போன பாண்டவர்தம்மையீண்டு......*
மேதகவழைத்துநாடு வேண்டுயினென்றழைட்டும்.....*
யாதவன்றனித்துவந்தானென் செய்வதியம்புமென்றான்

(எ-து) குற்றமற்ற மந்திரிகளைச் செழுமையுள்ள சந்திரவட்டக்குடையையுடைய துரியோதனன் பார்த்துக்கொடுமையாகிய காட்டுக்குப்போன பஞ்சபாண்டவரை இங்கேசெம்மைமையாக அழைத்துஉங்கள் நாட்டைக் கேளுங்களென்று மூட்டிவிட்ட கோபாலகிருஷ்ணனைவன்தனித்துவந்தான் அதற்குநாம் என்னசெய்வது சொல்லுமென்றானென்றவாறு, (௱௭௰)

பொரும்படைமைந்தன்கூறத் தந்தையும்பொருந்தச்சொல்வானரும்புலிவலையிற்பட்டால் விடுவரோவெயினராேனார்......*
வரம்பில்வெஞ்சேனையோடும் வளைந்துநீமாயன்றன்னைக் .. *
கரும்பொழுதகலுமுன்னே கொல்வதேகருமமென்றான் ...*

(எ-து) யுத்தஞ்செய்கின்ற சேனைகளையுடைய துரியோதனன்கேட்கத்தகப்பனாகிய திருதராட்டிரனும்பொருந்தும்படிசொல்லுவான் அருமையாகிய புலியானது வலையிலே அகப்பட்டால்வேடரானவர்கள்விட்டுவிடுவார்களோ, அளவில்லாதவெவ்விய சேனையோடுநீவளைந்துகொண்டு கோபாலகிருஷ்ணனை இராத்திரியானது நீங்குமுன்னே கொன்றுபோடுவதே நல்லகாரியமென்றானென்றவாறு. (௱௭௧)

கண்ணிலானுரைத்தமாற்றங்கேட்டலுங்காவலோரில் ......*
மண்ணில்பரிதற்குமுன்புதூதரைவளைந்துகொன்று.........*
எண்ணிலாவிந்தவண்ணமெவ்வழிக்கேற்றதென்று....... .. *
வெண்ணிலாமுறுவல்செய்து விகர்ணனும்விளம்பலுற்றான்.. *

(எ-து) கண்ணிலாததிருதராட்டிரன் சொன்னபேச்சைக்கேட்டவளவில் இராஜாக்களில் பூமியிலேஎவர்கள் இதற்குமுன்னே தூதர்களைவளைந்துகொன்றவர்கள் எண்ணிக்கையில்லாத இந்தவிதம்எந்தவழிக்குஎற்றதென்று வெள்ளியநிலாவைப்போற்சிரித்துச்சொல்லத்தொடங்கினான் விகர்ணனென்றவாறு, (௱௭௨)

மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணிபின்மிக்கோர்........*
தோத்திரமொழிவோர்மாதர் தூதரொன்றிவரைக்கொல்லில்..*
பார்த்திவர்தமக்குமேவுறுபாவமற் றிதனினில்லை ..........*
பூத்தெரிதொடையாய்பின்னுநரகினும்புகுவரொன்றான்....*

(எ-து) மூத்தவர்கள் இளையவர்கள்வேதப்பிராமணர்மிகுந்தநோயாளிகள் துதிசெய்பவர்கள் மங்கையர்கள் தூதர்களென்றுசொல்லப்பட்ட இவர்களைக்கொன்றால் அரசர்களுக்கு இதைவிடவேறேபாவமில்லை,பூவினாற்றொடுத்தமாலைபணிந்தஅரசனே அவர்கள்பின்னும் நரகத்திற்புகுவாரொன்றவாறு. (௱எ௩)

பழியுடைப்பகைஞரேனுந்தம்பெரும்பதியிலவந்தா........*
லழிவுறக்கோறல்பாவ மாண்மையுமல்லவென்பார்..........*
கழிகடற்சேனைசூழக்கங்குலின்வளைத்திட்டாலு ..............*
மெழிலுடைக்கொண்டல்வண்ண னகப்படானெவர்க்குமென்றான்,

(எ-து) பழியையுடைய சத்துருக்களானாலும் தன்னுடையபெரியவூரிலவந்தால் அழிவையடைய அவர்களைக்கொல்லுதல்பாவமும்வலுமையுமல்லவென்று சொல்லுவார்கள்மிகுந்தகடல்போன்றசேனைகள்சூழ இராத்திரியிலே வளைந்துகொண்டாலும் அழகுபொருந்தியமேகவண்ணரான ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஒருவருக்கும் அகப்படானென்றான் விகர்ணனென்றவாறு. (௱எ௪)

வெம்புயவலியான்மாதை விரிதுகிலுரிந்தவீரன்..........*
றம்பியைமுனிந்துசிறித்தமையனைநோக்கிச்சொல்வான் ..*
வம்பவிழலங்கன்மார்பாமந்தணமுரைக்கலுற்றா.........*
லிம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான்...*

(எ-து) வெவ்வியபுஜபெலத்தினாலே துரோபதியைத் துகிலுரித்ததுச்சாதனனானவன் தம்பியைப்பார்த்துக் கோபித்துத்தமையனைப்பார்த்துச்சொல்லுவான் வாசனைபொருந்திய மாலையணிந்தமார்பனே ரகசியம்பேசத்தொடங்கினால் இவ்விடத்திலே சிறியார்களை அழைத்து என்னகாரியஞ் சொல்லவென்றவாறு. (௱எ௫)

அதிரதர்முதலாயுள்ள வவனிபர்வளைந்துநிற்ப......... ......*
வெதிர்முகிழவழுங்கோயிலெரியிணையெங்குமூட்டி...........*

விதுரனுமவனுஞ்சேர வெந்திடமலைவதல்லால்........ .....*
மதிபிறிதில்லையின்னே வல்விரைந்தெழுமினென்றான்... ...*

(எ-று) அதிரதர்முதலாகிய அரசர்களெல்லாம்சூழ்ந்துநிற்கமேக
ந்தவழ்கின்ற அரமனையிலே நெருப்பைமூட்டிவிட்டுவிதுரனும்கோ
பாலகிருஷ்ணனுஞ் சேரவெந்துபோகும்படி செய்வதல்லாமல்வே
றேயோசனையில்லைசீக்கிரத்திற்புறப்படுமென்றான் துச்சாதனன்.

செங்கதிரொழுந்துசிதறிச்செறியிருணிற்பதுண்டோ..........*
விங்கிவணிருந்தவில்லிமேலெரியிடவேண்டுமோதான்...........*
வெங்கணையொன்றினுமேல்விளிந்திடவென்றுமீள்வேன்........*
கங்குலினெழுமினென்றுகன்னனுங்கனன்றுசொன்னான் ...*

(எ-று) சூரியன்கிரணங்களைவீசிப்புறப்பட்டானேயானால்உலகங்
களைமூடிய இருளானது நிற்குமோ இவனிருந்தவீட்டிலேநெருப்பு
ப்போடவேண்டுமோ?வெவ்வியபாணமொன்றினுமேல்சாகும்படிசெ
ய்துமீள்வேன் இப்பொழுதுதானே புறப்படுங்களென்றுகோபித்து
ச்சொன்னான் கர்ணமகாராஜனென்றவாறு. (௱௭௭)

பதிப்பெயர்ந்தேகிநாளைப்பகைவரைக்கூடுமாகில்..........*
விதிப்பயனென்னநம்மைவெஞ்சமர்வெல்லவொட்டான்......*
மதிப்பதென்வேறுகள்ளமாயனைமனையிற்கோலிச்...........*
சதிப்பதேகருமமென்றுசகுனியும்பின்னுஞ்சொல்வான் ... *

(எ-று) இந்தவூரைவிட்டுப்போய் நாளைநம்முடையபகையாளிக
ளுடனே கூடுவானேயானால் தடுக்கக்கூடாவிதிப்பயனைப்போலநம்
மைவெவ்வியயுத்தத்திலேஜெயிக்கவொட்டான் வேறேயோசிக்கவே
ண்டியதென்ன! கோபாலகிருஷ்ணனைவிட்டிலேவைத்து வஞ்சிப்ப
தேகாரியமென்று சகுனியானவன்பின்னுஞ்சொல்லுவான்.எ-று *

சொல்லுவதியற்கையன்றுசூழிபறித்தரக்கரோடு ... ... ... *
மல்லரையிருத்திமேலோராசனம்வகுத்துநாளை... ... ... ...*
யெல்லிடையழைத்துவீழ்வித்தியலரும்விலங்குபூட்டித் ... *
தொல்லருஞ்சிறையில்வைத்தல்தருக்குரிமையென்றான் *

(எ-று) சொல்லுவதுஇயற்கையல்லசுழிவெட்டிராக்ஷதர்களுடனே
மல்லர்களையும் உள்ளேவைத்து மேலேஒருஆசனஞ்செய்து நாளைர

த்திரியிலேயழைத்து அதிலேவிழும்படிசெய்து அரியவிலங்குபூட்டி அரியசிறையிலேவைப்பதுதூதருக்குயிபற்கையென்று சொன்னான் சகுனியென்றவாறு. (௱எகூ)

மாதுலனுரைத்தமாற்ற மருகனுமிசைந்துகங்குற்......*
போதிடையனேகமல்லர் வரும்செனப்புகன்றுதானும் *
நீதியினிருந்துதாழ நிலவறைசமைத்தபின்ன... ......*
ராதிநூராயிரம்பேரரக்கரையதனுள்வைத்தான்.... *

(எ-து) மாமனாகியசகுனிசொன்னசொல்லுக்கு துரியோதனனும்இசைந்துகேட்டு ராத்திரியிலே அநேகமல்லரைவரச்சொல்லித்தானுமிருந்துகொண்டு நிலவறையுண்டாக்கி அதிலேமுன்னே நூறாயிரம்அரக்கரை வைத்தானென்றவாறு. (௱அ௰)

மல்லர்பப்பரவர்தம்மை மற்றதினிரட்டிவைத்தான்...........*
வில்லுடைவீரர்தம்மைவேறதினிரட்டிவைத்தான்...........*
பல்படைவல்லோர்தம்மைப்பதின்மடங் கதனில்வைத்தா.....*
னல்லிலோர்கடிகைதன்னி லறிவனையழைக்கவென்றே... ...*

(எ-து) மல்லரையும் பப்பரவரையும்அதற்கிரட்டிப்புவைத்தான் வில்வீரரை அதற்கிரட்டிப்பு வைத்தான் ஆயுதத்திலே வல்லவர்கள்பலபேரை அவரிற்பத்துமடங்கு அதிலேவைத்தான் ராத்திரியிலேஒருநாழிகையில் அறிவையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவனைஅழைக்கவேண்டுமென்றானென்றவாறு. (௱அக)

பெரும்பிலவறையைவேயின் பிளப்பினனிறைத்துமூடி ...*
யரும்பெறன்மணிகளாலோ ராசனமதன்மேலாக்கிச்.........*
சுரும்பமர்மாலை தூக்கித்தொழிலுடைவிமானமேற்றி........*
வரம்பிலாவென்றிவேலான்மாறிலாவண்ணஞ்செய்தான்...... *

(எ-து) பெரியபிலத்துவாரத்தினுடைய அறையைமூங்கிற்பிளப்பினால் நிறைத்து மூடிவிட்டுப் பெறுதற்கரியரத்தினங்களாலேஒரு ஆசனம் அதன்மேலுண்டாக்கிவண்டுகள் மொய்க்கின்றபூமாலைதொங்கக்கட்டிச்சித்திரவிமானமொன்று மேலேவைத்து அநேகம்வெற்றியைத்தரித்தவேலையுடைய துரியோதனன்மாறுபாடு தெரியாதவிதஞ்செய்தானென்றவாறு, (௱அஉ)

அடியவர்மனத்திலுள்ள வாரிருட்கங்குறீர்க்கும்...............*
நெடியவனிருக்கவென்று நிலவறைவிரகிற்செய்த... ... .... *
கடியவனியற்கைக்கஞ்சிக் கங்குலுங்கடிதிற்போகப்... ......*
படியவர்துயிலும்போகப் பரிதியுமுதயஞ்செய்தான்........*

(எ-து) அடியவர்களுடைய மனதிலே யுள்ளநிறைந்த அஞ்ஞான விருளை நீக்குகின்ற ஸ்ரீகிருஷ்ணதேவரிருக்கவேண்டுமென்று உபாயமாய் நிலவறைசெய்த கடியவனாகிய துரியோதனனுடைய குணத்துக்குப்பயந்து இராப்பொழுதுஞ்சீக்கிரத்திலேநீங்கப்பூமியிலுள்ளவர்கள் நித்திரையும் நீங்கச்சூரியனுதயஞ்செய்தானென்றவாறு. (௱அரு)

சிரந்தருசுடிகைநாகத்திரள்மணிபலவுஞ்சிந்தி... ............*
நிரந்தரமருவிவீழுநிறத்திகழுதயக்குன்றிற்...............*
பரந்தெழுமருக்கல்சூழ்ந்தபடரிருட்கங்குல்கண்டு ........*
புரந்தரன்கோயிலிட்டபொங்கொளித்தீபம்போன்றான்......*

(எ-து)சர்ப்பத்தினுடைய உச்சியிலிருக்கின்றதிரட்சியையுடைய அநேகமணிகளுஞ்சிதறிஎப்போதும் அருவிக்கொழுகின்ற நிறத்தையுடையஉதயகிரியிலேபரவியெழுகின்றசூரியன் எப்படியிருக்கின்றானெனில், இருள்சூழ்ந்த இராத்திரியைக்கண்டு இந்திரனானவன் தன்அரமனைக்கிட்டமிகுந்தவொளியையுடைய தீபத்தையொத்தான். எ-று

தொடர்ந்தொளிருதயராகத்தோடுறநெருங்கிமேன்மே......*
லடர்ந்தரிபரந்தகாமனுகமவேதம்பாடத் ... ............ .....*
தடங்கயல்மலேந்துலாவுந்தாமனாமுகமுங்காதல்.......... ....*
மடந்தையர்முகமுஞ்சேரமணம் பெறமலர்ந்தமாதோ......*

(எ-து) தொடர்ச்சிகொண்டு பிரகாசிக்கின்ற உதயராகத்துடனே நெருங்கிமேலுமேலும்வண்டுகள் பரவிமன்மதனுடையஆகமவேதங்களைப்பாட தடாகத்திலேகயற்கெண்டைகள் சண்டையிட்டுஉலாவுகின்றதாமனா முகையினுடைய முகமும்ஆசையையுடையமாதர்களுடையமுகமும்ஒருசேரமணம்பெறும்படிமலர்ந்தனவென்றவாறு.

இருந்துயிலுணர்ந்தவேந்தர்யாவருமிரவிற்சுற்றும்... ......*
வருந்துயிலிலாதகண்ணன்வாழ்பெருங்கோயில்புக்கார்......*

பெருந்துயிலனந்தபோகப் பேரணை துறந்தமாலும்.. ......*
அருத்துயிலெழுந்துகாலையருங்கடன்முறையிற்செய்தான்...*

(எ-து) பெரியநித்திரை நீங்கிய அரசர்களெல்லாருஞ்சத்ருசிலும் நித்திரையில்லாத ஸ்ரீகிருஷ்ணதேவர்வாழ்கின்ற பெரியகோயிலுக்குப்போனார்கள் அப்போது சேஷிசயனத்திலே அறிதுயில் நீங்கியமகாவிஷ்ணுவும் அரியநித்திரை நீங்கிக் காலையிற்செய்யுங்கடன்களெல்லாஞ்செய்தானென்றவாறு. (௱அகா)

மாதவனிருந்தகோயில் வந்தடிவணங்கிமன்னன்......... ...*
தூதுவராழியங்கைத்தோன்றலே துளபமாலே......... ......*
யாதவகுலத்தோரேறேயெழுந்தருள்சென்றுனின்றெம்......*
மேதகுமரசனென்றார்முகுந்தனும் விரைவிற்சென்றான் ...*

(எ-து) இப்படி ஸ்ரீகிருஷ்ணதேவரிருந்த அரமனையில் துரியோதனன் விடுத்த தூதர்கள்வந்து அவர்பாதத்தில்வணங்கிச்சக்கிராயுதத்தையுடைய அரசனே துளபமாலையைப்பணிந்தமாயனே யாதவகுலத்தோருக்கொருஆண்சிங்கமேஎங்களரசன் உம்மையழைத்துக்கொண்டுவரச்சொன்னானென்றார்கள், அதுகேட்டு ஸ்ரீகிருஷ்ணபகவானுஞ் சீக்கிரத்திற்போனானென்றவாறு. (௱அஎ)

கந்தடுகளிற்றுவேந்தன் கண்ணிலாவரசுங்கங்கை...... ......*
மைந்தனுமுதலாயுள்ள மன்னருமதிவல்லோருந்............ *
தந்திரவகையுமேனையிளைஞருந்தன்னைச்சூழ .............*
விந்திரனிருக்கையன்னகோயிலூடினிதிருந்தான்,... .......*

(எ-து) கட்டுத்தறியையடுகின்ற யானையையுடைய துரியோதனராஜனானவன் திருதராட்டிரனும், பீஷ்மாசாரியர்முதலாகிய அரசர்களும்,மந்திரிகளும்,தந்திரிகளும்,மற்றத்தம்பிமார்களும்,தன்னைச்சூழஇந்திரனுடைய அரசிருக்கைபோன்ற கோயிலிலே இனிதாகவிருந்தானென்றவாறு. (௱அஅ)

நாமவேலரசரோடுநால்வகைச்சேனையோடும்..............*
மாமுகில்வண்ணன்வந்தா னென்றனர்வரவுகேட்டு...... ... *
வீமலர்த்தொடையினானும் வேத்திரத்தவரைநோக்கித்... ...*
தாமரைத்தடங்கண்மாயன் றன்னையேவிடுமினென்றான் ... *

(எ-து) அச்சத்தைத்தருகின்றவேலாயுதத்தையுடைய அரசர்களோ
டும்ரதகெச துரகபதாதிகளாகியநால்வகைச்சேனையோடும்மேகவண்
ணரான ஸ்ரீகிருஷ்ணதேவர்வந்தாரென்றுசொன்னார்கள் அதுகேட்டு
ப்புஷ்பமாலையையணிந்ததுரியோதனனும் பிரம்மையுடையசேவக
ரைப்பார்த்துத்தாமரைமலர்போன்ற விசாலமாகிய கண்களையுடை
ய அந்தக்கிருஷ்ணனைமாத்திரம் விடுங்களென்றுசொன்னான். எ-று *

தன்பெருஞ்சேனைநிற்கத்தண்டுழாயலங்கலானும்.............*
பின்புறநகைத்துவந்தரிருந்தபேரவையினெய்த... ......*
மின்புணர்துவசநாகவிடநிகர்மனத்தினானும்........... .. *
அன்பொடுதிகிரியானையதன்மிசையிருக்கவென்றான்.......*

(எ-து) தன்னுடைய பெரியசேனைகளெல்லாமிருக்கத்துளபமாலை
யையணிந்த ஸ்ரீகிருஷ்ணதேவரும் இன்பம்பொருந்தப் புன்சிரிப்பு
க்கொண்டு அரசர்களிருந்த பெரியசபைக்குப்போய்ப் பிரகாசமுள்
ளசர்ப்பக்கொடியையும் விஷத்துக்குச்சமானமாகியமனத்தையுமு
டைய துரியோதனனும் அன்பினுடனே ஸ்ரீகிருஷ்ணனை அதன்மே
லேயிருப்பீரென்றனென்றவாறு. (ா கூ௰)

(வேறு.)

இறைவனெழிற்கதிர் மணிகளழுத்திய தவிசினிழித்தலுமே,
நெறுநெறெனக்கொடுநிலவறையிற் புகநெடியவனப்பொழு
தே, மறலியெனத்தருதிருபனியற்றிய விரகைமனத்துணரா,
முறுகுசினத்தொடுமடியதலத்துறமுடிககனத்துறவே... ...*

(எ-து) ஸ்ரீகிருஷ்ணதேவர்கிரணங்களையுடைய ரத்தினங்கள் பதித்
த ஆசனத்திலிருந்தவளவிலே நெறுநெறுவென்றகொடிய நிலவறை
யின்மேல் அதுபுக அவர் அப்போது கூற்றுவனென்றுசொல்லத்தக்கது
ரியோதனன்செய்தசூதைமனதிலேயறிந்து மிகுந்தகோபத்துடனே
பாதங்கள் பாதாளத்திலே பொருந்தசிரசு ஆகாயத்திலே பொருந்த
வென்றவாறு. (ா கூக)

அஞ்சினமஞ்சினமென்றுவிரைந்துபரண்டர்பணிந்திடவுந், து
ஞ்சினமின்றெனவன்பணியின்கிளைதுன்பமுழந்திடவும், வஞ்ச
மனங்கொடுவஞ்சகனின்றிடுவஞ்சனைநன்றிதெனு,நெஞ்சில்வெ
குண்டிலகொன்றுபடும்படி நின்றுநிமிர்ந்தனனே...........*

(எ-து) பயந்தோம் பயந்தோமென்று சீக்கிரத்தில் உயர்ந்ததேவர்கள் வணங்கவும் இன்றுஇறந்தோமென்று சர்ப்பக்கூட்டங்கள் துன்பப்படவும் வஞ்சகமனத்தைக்கொண்டு துரியோதனன் இன்றுசெய்தஇந்தவஞ்சகம் நன்றாயிருக்கிறதென்று மனதிலேகோபித்துஉலகமெல்லாம்ஒன்றுபடும்படி நின்று உயர்ந்தார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (௱௬௨)

மல்லரரக்கர்குலத்தொடுபப்பரர்வாளினர்வேலினர்போர்வில்லி
னரிப்படிதுற்றநிலத்தறை மேவியவீரரொலாந், தொல்லையிடி
க்கயர்வுற்றயிரற்றுறுசுடிகையராவெனவே, கல்லெனவுட்கினர்
தத்தமுடற்பலகால்கொடுதைத்திடவே...................*

(எ-து) மல்லர்கள்ராக்ஷதர்கள் பப்பரர்கள் வாளையுடையவர்வேலையுடைவர் பொருகின்ற வில்லையுடையவர் இப்படிபூமியிலேவெட்டியநிலவறையிலேயிருந்த சுத்தவீரர்களெல்லாம் இடிக்குப்பயந்துவருத்தமடைந்து உயிரிற்றிருந்த சிரசையுடையசர்ப்பங்களைப்போலக் கல்லென்னுமோசையுடனே அஞ்சினார்கள் தங்கள் தங்கள்தேகத்திலேபலகால்களைக்கொண்டுஉதைத்திடவென்றவாறு. (௱௬௩)

அற்புதபங்கயநற்பதமூன்றவினக்குழியின்புடையே, சற்பதலந்
தொறுமற்றுவிழுந்தன தத்தநெடுந்தலைபோய், மூற்பவனன்
பொரமூக்குவடுந்துணிபட்டுமுடங்கியபொன், வெறபென நி
ன்றனர்வெற்றுடலங்கொடுவிற்படைகொண்டவரோ...... ...*

(எ-து) அழகியதாமரைமலர்போன்ற நல்லபாதத்தினாலுதைத்தலினால் அந்தக்குழியினிடத்திலே நாகலோகந்தோறும் அற்றுவிழுந்தசம்முடைய நெடிய தலைகளெல்லாம்போய் முன்னேவாயுபகவான்போர்செய்ய மூன்றுசிகரமுந் துணிபட்டுவளைந்த பொன்மலைபோல் நின்றார்கள் வெற்றுத் தேகங்கொண்டு விற்படைகொண்டசுத்தவீரர்களென்றவாறு. (௱௬௪)

மேல்வலியுற்றெதிர் வீசியெழிற்கருமேகநிறத்திருமால், கால்வி
சையிற்படமோதுதலிற் பொருகாமர்புயத்துணைபோய், நீலநி
றக்கவின்வாசவன்வச்சிரநீள்படையிற்சிறகிர், மால்வரையொத்
தனர்வாளைபெறக்கதிர்வாள்களெடுத்தவரோ..................*

(எ-து) அழகியகரிய மேகவண்ணராகிய ஸ்ரீகிருஷ்ணதேவர்மேலேவலுமைகொண்டுஎதிரேவீசுகால்விசையினுமேலபடும்படிமோதுதலினுல்பொருகின்ற அழகியபுஜங்களிரண்டும்போய் நீலநிறத்தையுடைய அழகியஇந்திரனுடைய வஜ்ராயுதத்தினுலே சிறகறுப்புண்ட பெரியமலைகளையொத்தார்கள் வெற்றிபெறும்படி. வாளாயுதங்களையெடுத்தசுத்தவீரர்களென்றவாறு. (௱௬௫)

வெயில்விடுபைத்தலையமணிமிசைத்துயில் விபுதர்களுக்கரியோான்
பயிலவுதைத்தலினவர்களுரத்திடைபதமலர்பட்டுருவா......*
மயில்கடவிக்கடவுளர்பகையைக்கதிர்மகுடமுருக்கியவேள்...*
அயில்கொடுகுத்தியநெடுவரையொத்தன ரயில்களெடுத்தவரோ.

(எ-து)ஒளியுள்ளசிரோமணியையுடைய ஆதிசேடன்மேல்நித்திரைசெய்கின்ற தேவர்களுக்கரிய ஸ்ரீகிருஷ்ணதேவர் உதைத்தபடியால் அவர்கள்மார்பிலேபாதங்கள்பட்டு ஊடுருவிமயில் வாகனத்தைச்செலுத்தித்தேவர்கள்பகையாகியசூரபத்மாமுதலிய அசுரர்களைச்சங்கரித்தசுப்பிரமணியசுவாமி வேலாயுதங்கொண்டுகுத்திய நெடியகிரௌஞ்சகிரியையொத்தார்கள் வேலாயுதங்களெடுத்த சுத்தவீரர்களென்றவாறு. (௱௬௬)

மின்சுழிகைப்புயகங்கள்வெருக்கொளும் வெங்கருடக்கொடியோன்
வன்பதபத்மநகங்கொடெடுத்துயர்வளகனத்திடலால்.........*
முன்புவனத்திடைவந்துகவிக்கிறைமெய்ம்புணரப்புகல்போ...*
தென்புமலைக்குறுபண்பையடுத்தனரொஞ்சியபப்பரரோ............*

(எ-து) மின்னுகின்ற ரத்தினம்விளங்கிய உச்சியையுடைய சர்ப்பங்கள் அஞ்சுகின்றவெவ்விய கருடக்கொடியோனாகிய ஸ்ரீகிருஷ்ணதேவர்தம்முடைய பாததாமரையிலிருக்கும் நகத்தைக்கொண்டெடுத்துஉயர்ந்த ஆகாயத்திலேயெறிதலால் முன்காட்டிலேவந்து சுக்கிரீவன்வலுமையை அறியச்சொன்னபோது இராமரால் துந்துபிஎனும் புமலையென்னபாடுபட்டதோ அதைஅடுத்தார்கள் வலுமைகுறைந்தபப்பரரென்றவாறு. (௱௬௭)

மைநந்துபடைத்துயர்பஞ்சவர்சொற்படிவந்தமலர்க்கழலா...*
வுந்தியுதைத்திடலம்புதையப்பிலமொன்றியொளித்திடவா *

லந்தணன்முற்பகல்வந்துபுடைத்திடவஞ்சிநிலத்திடைவிழ்..*
விந்தமொடொத்தனர்வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே.

(எ-று) வலுமைபடைத்து உயர்ந்த பஞ்சபாண்டவர் சொற்படி தூதுவந்தமலர்போன்றபாதத்தினால் தள்ளிஉதைத்துத்தேகம்புதையப்பிலத்துவாரத்திலே ஒன்றிஒளித்திடும்படிசெய்தலாலேஅகஸ்தியமுனிவர்முன்னாளிலேவந்துதள்ளப்பயந்துபூமியிலேவீழ்ந்தவிந்தகிரியையொத்தனர் நிலவறையிலே அகப்பட்ட வெவ்வியகண்களையுடையராக்ஷதர்களென்றவாறு. (௱௯௮)

அந்தவிடத்தெறிபம்பரமொத்துடலஞ்சுழலச்சுழலக்.......*
குந்தியுறித்தயிருண்டவர்பொற்கழல்கொண்டுசுழற்றுதலால் *
முந்தமரர்க்கமுதந்தரமைக்கடன்முன்சுழலச்சுழலும்... ...*
மந்தரமொத்தனர்குந்தமெடுத்தெதிர்வந்துமலைந்தவரோ....*

(எ-று) அந்தநிலவறையிலே எறிகின்ற பம்பரத்தையொத்துத் தேகஞ்சுழலச்சுழலக்குந்தியிருந்துஉறியிலிருந்ததயிரையுண்ட ஸ்ரீகிருஷ்ணதேவரானவர் பொன்போன்ற பாதத்தைக்கொண்டு சுழற்றுகையினாலேமுன்னேதேவர்களுக்கு அமுதங்கொடுக்கச் சமுத்திரமானது முன்னேசுழலச்சுழலுகின்ற மந்தரகிரியையொத்தார்கள், எறியீட்டியெடுத்து எதிரேவந்தியுத்தஞ்செய்தசுத்தவீரர்களென்றவாறு

முட்டியதொல்குருதிக்கடன்மல்கலின் முட்டிகொள்பல்விரலா
னெட்டுடலம்வகிர்பட்டதினுள்விழநித்தர்செய்தொல்வினையால்
மட்டறவல்விறலுற்றெதிர்செல்கவிமைக்கடலெல்லையிலே... *
விட்டனகல்வரையொத்தனர்வெல்கழலெக்குலமல்லருமே..... *

(எ-று) அந்தநிலவறையை முட்டப்பெற்ற ரத்தசமுத்திரம்நிறைந்தபடியால்முட்டிக்கொள்ளுகின்றபலவிரல்களினாலேநெடியதேகம் பிளவுபட்டு அதினுள்ளேவிழ ஸ்ரீகிருஷ்ணதேவர்செய்த செய்கையினாலே அளவற்றவலுமைகொண்டு எதிரிட்டுச்சென்ற வானரங்கள்கரியகடலிலேஇட்டபர்வதங்களையொத்தனர், வெல்லுகின்றவீரக்கழலையணிந்தகூட்டமாகிய எவ்விதமல்லர்களுமென்றவாறு. (௨௱)

எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பனவெக்கடனிற்பனவென்......*
றிப்புவனத்துயிர்முற்றுமயக்குறவுட்கினரொய்த்திலமையோர் *

னைமப்புயலொத்தொளிர்பச்சைநிறத்தினன்வர்க்கமலர்க்கழலா *
லொப்பறமட்குழியுற்றவனாப்படவொத்திமிதித்தனுமே... *

(எ-று) இனியெந்தப்பூமிகள்நிற்கும் எந்தமலைகள்நிற்கும் எந்தக் கடல்கள்நிற்குமென்று இந்தப்பூமியிலுள்ள உயிர்முழுவதும்மயக்கத் தையடையத்தேவர்கள்அஞ்சியிளைத்தார்கள்கரியமேகத்தையொத்து விளங்கிய ஸ்ரீகிருஷ்ணதேவர் அநேகமலர்போன்றதிருவடிகளால் ஒப் பில்லாமல் நிலவறையி லிருந்தவனைப்படும்படி ஒத்திமிதித்தவனவி லென்றவாறு. (உ௱க)

கொண்டன்முழக்கெனவம்புவியைக்கடல் கொண்டெழுதற்கெதி ருஞ், சண்டமுழக்கெனவன்பவனக்கிளைதந்தமுழக்கெனவே, வண் டினமொய்த்தெழுவண்டுளபத்தொடைவண்டுவராதிருமா, லண்ட முகட்டுறநின்றுசிரித்தனனங்கணெருப்பெழவே............... *

(எ-து) மேகமுழக்கமென்றுசொல்லவும், பூமியைக்கடல்கொண் டெழுதற்கு எதிரும் வேகத்தையுடைய முழக்கமென்றுசொல்லவும், வலுமைபொருந்திய வாயுவின்கூட்டஞ்செய்த முழக்கமென்றுசொ ல்லவும், வண்டுகள்மொய்த்தெழுகின் வளத்தையுடைய துளபமாலை யையணிந்த துவாரகைக்கு அரசராகிய ஸ்ரீகிருஷ்ணதேவர் அண்டமு கடாளாவநின்று அழகியகண்ணில்நெருப்பெழச்சிரித்தாரென்றவாறு

ஒன்றுபடக்கடலம்புமுகப்பனவும்பர்குலத்தருவுஞ்... ......*
சென்றுமுறிப்பனவெண்டிசையிற்குலசிந்துரமெற்றுவவெண்
குன்றமுடைப்பனபைம்பொனிறக்கிரிகொண்டுதிரிப்பனவா *
லன்றுதனித்தனிநின்றுமலைத்தருளங்கைகள்பற்பலவே......*

(எ-து) அப்போது வெவ்வேறு நின்று யுத்தஞ்செய்த பலகைக ளிலேசிலகைகள் சமுத்திரநீரையெல்லாம் ஒன்றுபடும்படிமொள்ளு ஞ்சிலகைகள் தெய்வலோகத்திலிருக்கும் பஞ்சதருக்களையும்போய் முறிக்குஞ்சிலகைகள்எட்டுத்திக்கிலும்போய் அஷ்டகஜங்களையுந்தள் ளும்சிலகைகள் அஷ்டகுலபர்வதங்களையும் உடைக்கும்சிலகைகள்மக மேருவைச்சுழற்றுமென்றவாறு. (உ௱௩)

துகிரிதழ்வைர்துநல்வளைகண்முழக்கினதொடர்சிலகைத்தலமே...*
யகிலம்வெருக்கொளவரிமுழவெர்தினகைவசிலகைத்தலமே .....*

டகலும்வடிக்கணையுவணபெடுத்தனபொருசிலகைத்தலமே.......*
திகழ்விசயத்தொடுசிலைகள்குனிப்பனசிலசிலகைத்தலமே.. .... *

(எ-து) சிலகைகள்பவளம்போன்றவாயிலேசங்குகளைவைத்துமு ழக்கஞ்செய்தன, சிலகைகள் பூலோகம்அஞ்சும்படி எரிகின்றமழுவா யுதங்களைஎறிந்தன சிலகைகள்சொல்லுகின்ற கருடாஸ்திரங்களை யெ டுத்தன, சிலகைகள் ஜயத்துடனே வில்லுகளைக் குனிப்பனவாமென்ற வாறு. (உ௱௪)

வெங்கணையத்திரள்குந்தநிறப்படைவெம்புமுலக்கைகள்போர்... *
பொங்கியவச்சிரமுந்துகலப்பைகள்புன்கழுவர்க்கமுமே..... .....*
வெங்குமலைத்தெழுசெஞ்சுரிகைத்திரடண்டமெனப்பலபோர்... ....*
தங்கியசக்கரபந்திதரித்தனதனபலகைத்தலமே.....................*

(எ-து) வெவ்வியவளைதடிகள் கைவேல்கள்வெம்பச்செய்யும்உல க்கைகள் போனாமிகச்செய்கின்ற வஜ்ராயுதம் எரிகின்றகலப்பைகள் சூலவர்க்கங்கள் எவ்விடத்தும்போர்செய் தெழுகின்றஉடைவாள்கள் தண்டாயுதங்கள் பலபோர்தங்கிய சக்கிரபந்திகளாகிய இவைகளைத்தரி த்திருந்தன அநேகங்கைகளென்றவாறு. (உ௱௫)

மேலெழுமங்கதிர்வாளுறைபோம்படிவீசினவான்படையே... .. *
தோலினமேந்தினநீள்கவசேந்தினசோரிகள்சோர்ந்திடவே... ...*
ஞாலமெலாம்பொருதோமரம்வாங்கினநாவொருமூன்றெனவாஞ்*
சூலமொடோங்கினபாசமொடோங்கினசூழ்சிலபூங்கரமே... .....*

(எ-து)சிலகைகள்மேலேயெழுகின்ற அழகியகிரணங்களையுடைய வாளாயுதங்களை உறைபோகும்படி வீசுதல்செய்தன சிலகைகள்கே டகங்களேந்தின, சிலகைகள் நெடியகவசங்களேந்தின, சிலகைகள்உதி ரமொழுகப் பூமிமுழுவதையும்பொருகின்ற பெருஞ்சவளங்கள்கொ ண்டன,சிலகைகள் நாக்குகள்மூன்றென்னப்பட்ட சூலங்களோடுயர்ந் தன, சிலகைகள்பாசங்களோ டுயர்ந்தனவென்றவாறு. (உ௱௬)

சிலசிலகைத்தலமடுகழலிற்பலசெறிகழல்கட்டினவே........*
சிலசிலகைத்தலமறுகுபுயத்திடை செறிதொடையிட்டனவே*
சிலசிலகைத்தலமணிகொளுரத்திடைபணிகடிருத்தினவே... *
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுநர்திகைத்திடவே*

(எ-து) சிலசிலகைகள் கொல்லுகின்றபாதங்களிலே வீரக்கழல்க ளைக்கட்டின சிலசிலகைகள் புஜங்களிலேமலர்மாலைகளிட்டன சிலசில கைகள் அழகினைக்கொண்டமார்பிலே ஆபரணங்களைத்திருத்தினசில சிலகைகள் சத்துருக்கள்திகைக்கும்படி விரல்களைக்கொண்டுசுட்டிக் காண்பித்தனவென்றவாறு. (உாஎ)

மாயிருஞாலமெலாம்வெளி யாயொளிர்மரகத சோபையுறப்
போயிருபாலும் வளைந்துவளைந்தெதிர் பொருமுனைவெம்ப
டையோ,டாயிரமாயிர மங்கைபுறப்படவண்டரு மாதவரும்
பாயிரநான்மறைபாடிவியந்துபணிந்துபுகழ்ந்தனரோ... ...*

(எ-து) மகத்தாகிய பெரியபூமியேல்லாம் வெளியாய் விளங்குகி ன்றமரகதத்தின் பிரகாசத்தையுடைய இரண்டு பக்கத்திலும் போய் வளைந்துவளைந்து எதிரேபொருகின்ற முனையையுடைய வெவ்விய ஆயுதத்துடனே இரண்டாயிரங்கைகள்புறப்படத்தேவர்களும் முனிவ ர்களும்பாயிரமுள்ள நாலுவேதங்களையும்பாடி அதிசயித்துப்பணிந் துபுகழ்ந்தார்களென்றவாறு. (உாஅ)

ஆரணனேயரனேபுவனங்களனைத்தையுமன்றுதவும்... ......*
காரணனேகருணாகரனேகமலாசனிகாதலனே......... ......*
வாரணமேபொதுவாயொருபேரிடவந்தருளும்புயலே... ..*
நாரணனேமுனியேன்முனியேலென நாகர்பணிந்தனரோ.....*

(எ-து) பிரமதேவனே உருத்திரமூர்த்தியே புவனங்களையெல்லா ம்அன்று உதவிய மஹாவிஷ்ணுவேகிருபைக்கிடமானவனே இலட்சு மிக்குக்கணவனேகெஜேந்திரன் ஆதிமூலமேயென்றுபொதுவாயொ ருபேரிட்டழைக்க நானே அப்பேருக்கு உடையவனென்றுவந்தமேக வண்ணனே நாரணனே கோபியாதேகோபியாதேயென்று தேவர் வணங்கினர்களென்றவாறு, (உாகூ)

மாதவனேமுனியேலெமையாளுடைவானவனேமுனியேல்..*
யாதவனேமுனியேலிதயத்திலிருப்பவனேமுனியே...... ...*
லாதவனேமுனியேன்மதிவெங்கனலானவனேமுனியே.....*
னீதவனேமுனியேன்முனியேலெனநின்றுபணிந்தனரோ ...*

(எ-று) மாதவனேகோபியாதேஎங்களை அடிமையாகவுடையதே வனேகோபியாதே யாதுமர்பில்வந்தவனே கோபியாதேஅடியார்க ள்மனத்திலிருப்பவனேகோபியாதேசோமசூரியாக்கினியானவனே கோபியாதே நீதியையுடையவனே கோபியாதேகோபியாதேயென் றுநின்றுபணிந்தார்களென்றவாறு. (உ௱ய)

கங்கைமகன்கதிரோன்மகனம்பிகைகாதன்மகன் றனையர், அங்க வையின்கணிருந்தநராதிபரனடயவெழுந்தனடவே, செங்கைகு வித்தசிரத்தினராயுணர்வொன்றியசிந்தையரா, யெங்கள்பிழை த்தலையின்றுபொறுத்தருளென்றுபணிந்தனரே.............*

(எ-று) ஸ்ரீபீஷ்மாசாரி கர்னன் திருதராட்டிரன் அவன்பிள்ளைகள் அங்கேசபையிலே யிருந்தராஜாக்கள் எல்லாருமெழுந்திருந்து சிரசி ன்மேற்கைகளைக் கூப்பிக்கொண்டவர்களாய் அறிவுமிகுந்த மனமு டையவராய் நாங்கள்செய்த தப்பிதத்தையின்று பொறுத்தருள்வா யென்று வணங்கினார்களென்றவாறு. (உ௱யக)

கண்ணபொறுத்தருள்வெண்ணெயருந்தியகள்வபொறுத்தருள் கார்வண்ணபொறுத்தருள்வாமபொறுத்தருள்வரதபொறுத்த ருணீ, திண்ணமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பி ழையென், றண்ணன்மலர்க்கழல் சென்னியில்வைத்தெதிரன்று துதித்தனரே..................................................*

(எ-று) கண்ணனேபொறுத்தருள்ஆடர்பாடியில் வெண்ணெயுண் டகள்வனே பொறுத்தருள் மேகவண்ணனேபொறுத்தருள்வாமனே பொறுத்தருள் வரதனேபொறுத்தருள் சத்தியமாக மனத்திலேஅறி வானதெவ்வளவுமில்லாத சிறியவர்கள்செய்தபெரும்பிழையையென் றுஸ்ரீகிருஷ்ணதேவருடைய தாமரைமலர்போன்றபாதங்களைச்சிரசி லேவைத்துக்கொண்டு எதிரேநின்று அன்று துதிசெய்தார்க. எ-று*

தேவரும்வாசவனுந்திறலும்பர்கடேவனுநான்முகனும்.....*
யாவருமன்பினொடாயிரநாமமுமெண்ணியிறைஞ்சுதலால்..*
மூவருமொன்றெனநின்றருளுதனுமுனிவுதவிர்ந்தருளா... *
மீவருமண்டமுறுந்திருமேனியடங்கினன்மீளவுமே..... ...*

(எ-து) முப்பத்து முக்கோடிதேவர்களும் இந்திரனும் திறலையு
டையதேவதேவனாகிய பிரமதேவனும் எல்லாரும்பத்தியுடனே ஆயி
ரந்திருநாமமும் தியானித்து வணங்கியபடியினாலேதிரி மூர்த்திகளு
மொன்றென்றுசொல்லும்படிநின்ற ஸ்ரீகிருஷ்ணதேவரும் கோபம்
நீங்கிக்கிருபைசெய்து உலகமெல்லாமாகிய திருமேனிமறுபடியும்அ
டங்கினரென்றவாறு. (௨௱௰௩)

தன்னிலுயர்ந்தவர்யாருமிலாமுகில்சதுமறையின்படியே ...*
யென்னிலமுந்திருவடியின்மறைந்திடவிப்படிநின்றிடவும் ..*
பின்னையுமஞ்சியயர்ந்திலனெஞ்சுபெயர்ந்திலனுகழுமே.....*
சென்னியிலுங்கரம்வைத்திலன்வண்புகழ்சிறிதுமொழிந்திலனே

(எ-து) தனக்குஉயர்ந்தவர்கள் ஒருவருமில்லாதஸ்ரீகிருஷ்ணதேவர்
நான்குவேதத்தின்படி எந்தப்பூமியுந் திருவடியிலே மறைந்திட இப்
படிநிற்கவும்பின்னும் அஞ்சிமனத்தில்வருந்துகிலன், தேகமசைகில
ன், சிரசிலேகரங்களுங்கூப்புகிலன், வளத்தையுடையஅவர்கீர்த்தியைச்
சிறிதுஞ்சொல்லுகிலன், துரியோதனனென்றவாறு. (௨௱௰௪)

தொல்லவையின்கணிருந்தநராதிப துன்மதியாலென்னை நீ.....*
கொல்லநினைந்தது நன்றெனவென்றிவைகூறினனெம்பெருமா
னெல்லையினின்குலமுற்றுமடிந்திடவுற்றுமலைந்தொர்கணத் *
தெல்லையில்வெஞ்சமர்நூறுவன்யாவருமேறுவர்வானுலகே *

(எ-து) பழமையாயுள்ளராஜசபையிலேயிருந்த துரியோதனரா
ஜனே துற்புத்தியினால் நீஎன்னைக்கொல்ல நினைத்தது நல்லதென்று
சொல்லி ஸ்ரீகிருஷ்ணதேவர்சீக்கிரத்திலேஉன்குலமுழுவதுமடியயுத்
தஞ்செய்துஒருகணநேரத்துற் கொல்லுவேன் அப்போதுஎல்லாரும
மேலுலகத்திலேஏறுவரென்றுபின்னுஞ்சொல்லுவரென்றவாறு...*

அஞ்சினநின்னையழித்திடநின்னுடனன்றுபெருஞ்சமர்வாய் *
வெஞ்சுடராயுதமொன்றுமெடுக்கிலமென்றுவிளம்பியது...*
மெஞ்சமலைந்தெதிர்வந்துயிர்கொள்ளுதுமென்றுதனித்தனியே*
பஞ்சவர்கூறியவெஞ்சினவாசகமும்பழுதாமெனவே...... *

(எ-து) உன்னைக்கொல்லுவதற்கு அஞ்சினோம்உன்னுடனே அன்றுபெரியயுத்தத்திலேவெவ்விய கிரணத்தையுடையஆயுதமொன்றும் எடுக்கமாட்டோமென்று சொல்லியதும்பாண்டவர்கள்தாம் வந்துசரணடையிட்டு உயிரைக்கொள்ளுகிறோமென்றுதனித்தனியேசொல்லியசபதமுள்ளபேச்சும்பழுதாமென்றல்லவோவென்றவாறு. (உ௱௰௬

என்றுரையாடிநெடுங்கடல் வண்ணனெழுந்தருளப்பிறகே,செ
ன்றனசெம்முடி மன்னவரும்பணிசேர்கொடியோனையலா, னி
ன்றுபசாரமுரைத்தவர் தம்மைநிறுத்தியதந்தரமே, வன்றிறல
ங்கர்பிரானொடுகூறினன்மற்றொருவாசகமே...... ... ......*

(எ-து) இப்படிசொல்லி நெடியகடல்வண்ணரான ஸ்ரீகிருஷ்ணதேவர்எழுந்தருளப்பின்பு எந்தஅரசர்களும்அவர்பின்னே போனார்கள்சர்ப்பக்கொடிபடைத்த அந்தத்துரியோதனனை யல்லாமல்நின்று உபசாரஞ்சொன்னபேர்களை நிறுத்தி அநேகந்தரம் வலிமையுள்ளநிலையுடைய அங்கதேசத்துக்குஅதிபதியாகியகர்னனுடன்ஒருபேச்சுச்சொன்னானென்றவாறு, (உ௱௰௭)

வண்மையினுயரங்கர்குலாதிபமதிகுலம்வாழ்வுறவந்.......*
திண்மையினுயர்மன்னவரைவருமுன்னினுனக்கிளையோர்*
பெண்மையினுயர்குந்திவயிற்றிடைபெருமையினுலிதயத் *
திண்மையினுயர்நின்னையுமன்பொடுதினகரனல்கினனே. *

(எ-து) கொடையினுயர்ந்த கர்னமகாராஜனே சந்திரவம்சம்வாழவந்த உண்மையினுயர்ந்த பாண்டவரைந்துபேரும் நினக்குமிடத்தில் உனக்கிளையவர்கள், பெண்தன்மையினுயர்ந்த குந்திமாதேவிவயிற்றிலே பெருமையினாலும் மனவலியாலும் உயர்ந்தஉன்னையும் அன்புடனே சூரியன்பெற்றானென்றவாறு. (உ௱௰௮)

ஏயுநெடுங்கொடிமுரசுடையோனையெழிற்றருமன்றரவே ...*
வாயுவழங்கினன் வீமனைநல்கினன் விஜயனைவாசவனு ... ... *
மாயுணிகழ்ந்திடுவேதமருத்துவரன்பொடளித்தனர்செந்.....*
தேயுவெனுந்திறனகுலனையுஞ்சகதேவனையும்பெரிதே... ... *

(எ-து) நெடியமுரசக்கொடியுடைய தருமராஜாவை அழகிய யமன்பெற்றான் வீமனை வாயுபகவான்பெற்றான் அர்ச்சுனனைத்தேவேந்திரன்பெற்றான் அக்கினியென்னுந் திறலையுடைய நகுலனையும்சகாதேவனையும் ஆயுள்வேதமறிந்த மருத்துவதேவர்கள் அன்புடனேபெற்றார்களென்றவாறு. (௨௱௰௯)

அந்தணன்றன்றருமந்திரமைந்தினிலறுவரையுங்கடவுட் ...*
குந்திபயந்தனள்யானினியென்பலகூறுவதுங்களினீ.........*
ரிந்தநிலம்பெறுவீர்தவிர்வீர்பெறவேறினியாருரியார்...... *
வந்தினிநம்பியர்தம்மொடுசேர்கெனமாலுமொழிந்தனனே*

(எ-து) தூர்வாசமுனிவரருளிய அஞ்சுமந்திரத்திலே ஆறுபேரையும் தெய்வத்தன்மையுள்ள குந்திமாதேவிபெற்றனள் யான்பலபேச்சுச்சொல்லவேண்டியதென்னவிருக்கிறது உங்களுக்குள்ளே நீங்கள் இந்தப்பூமியைப்பெற்றாலும் விட்டுவிட்டாலும் உங்களைவிடப்பெறுதற்கு வேறெவர்உரிமையுள்ளவர்களாவர், இனிவந்து உன்னுடையதம்பிமாரோடுசேரென்றுசொன்னார்ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு, ௨௱௨௰

[வேறு.]

கன்றால்விளவின்கனியுகுத்துங்கழையாலினாயின்கணமழைத்துங்*
குன்றான்மழையின்குலந்தடுத்துங்குலவுஞ்செல்வக்கோபாலா....*
வின்றாலெனதுபிறப்புணர்ந்தேனென்றன்புருகியெம்பியர்பாற் ...*
சென்றாலென்னைநீயறியச்செகத்தாரொன்றுஞ்சிரியாரோ......... *

(எ-து) பசுவின்கன்றினால் விளவின்பழத்தையுதிர்த்தும், மூங்கிற்குழலால்பசுக்கூட்டங்களையழைத்தும், கோவர்த்தனகிரியால்மேகஞ்சொரிந்தமழையைத்தடுத்தும்பிரகாசிக்கின்ற செல்வத்தையுடைய கோபாலகிருஷ்ணனே, நீர்சொல்லுகையினாலே இன்றுஎன்னுடையபிறப்பையறிந்தேனென்று அன்புருகி என் நம்பியரிடத்திற் போனால் என்னை நீயறிய உலகத்தார்எப்போதுஞ்சிரிக்கமாட்டார்களோ வென்றவாறு. (௨௱௨௧)

ஆமொன்றறியத்தகாதவெனையரசுமாக்கிமுடிசூட்டிச்... ....*
சீருந்திறமுந்தனதுபெருந்திருவுமெனக்கேதெரிந்தளித்தான

பாரின்றறியநூற்றுவர்க்கும்பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும்
போரொன்றறிந்துஞ்செய்நன்றிபோற்றாதவரிற்போவேனே*

(எ-து) இன்னுனென்றறியத்தகாதவென்னை அரசனுக்கிக்கிரீடந்த ரித்துச்சிறப்பையுந்திறத்தையும்பெரியசெல்வத்தையுமெனக்கேதெ ரிந்துகொடுத்தான், அதுவுமல்லாமல்இன்று பூமியெல்லாமறிய அந்த த்துரியோதனன்முதலிய நூற்றுவர்க்கும் குற்றமற்ற ஜெயத்தை யுடைய பஞ்சபாண்டவர்க்கும் யுத்தம்வந்துநேரிட்டிருக்கிறதென்று அறிந்தும் ஒருவன்செய்தநன்றியைக் காப்பாற்றாதவர்களைப்போல் நான்போவேனோவென்றான் கர்னமகாராஜனென்றவாறு, (௨௨௨)

இரவிக்குரியதிருமதலையிவ்வாறுரைக்கவிசைவண்டு...... ........*
விரவிப்பயிலுந்துழாய்முடியோன் வேறோர்மொழியும்விளம்பாமல்,
புரவிற்றடந்தேரூர்வானையேமகன்றருள்யோருசார்வாய்...... *
புரவித்தாமனின்றானை வருமகென்றழைத்துப்புகல்கின்றான்......... *

(எ-து) சூரியன்புதல்வனாகியகர்னன் இப்படிசொல்ல,வண்டுகளி சைபாடுகின்றதுளபமாலையையணிந்தகிரீடத்தையுடையஸ்ரீகிருஷ்ண தேவர்மற்றொருசொல்லுஞ்சொல்லாமல் அவனைப்போமவென்றனுப் பிஒருபக்கத்திலேநின்ற அசுவத்தாமனைவாவென்றழைத்துசம்சாலனு வாரொன்றவாறு. (௨௨௩)

போயேகானம்பலதிரிந்தும்புகன்றவிரதம்பொய்யாம.......... *
லாயேவந்தபாண்டவர்களைந்தூர்வேண்டமறுத்ததற்குச்........... *
சேயேயனையசிலமுனிவன்சேயேநாளைசமெருக்களத்தி........... *
னீயேகரியென்றெடுத்துரைத்தானெடியோன்றுளபமுடியோனே,

(எ-து) காடுகளெல்லாம்போய்த்திரிந்தும் சொன்னவிரதம்பொ ய்யாமல்செலுத்திவந்தபஞ்சபாண்டவர்கள்ஐந்தூராவதுகேட்க, இல் லையென்று துரியோதனன்மறுத்ததற்கு முருகக்கடவுளையொத்த துரோணசாரிகுமாரனான அசுவத்தாமாவே நாளையுத்தகளத்தில்நீயே சாக்ஷியென்று எடுத்துச்சொன்னார் நெடியவனும் துளபமணிந்தமுடி யையுடையவனுமாகிய ஸ்ரீகிருஷ்ணதேவரொன்றவாறு. (௨௨௪)

ஆனாவுனதாண்மைக்குநிகரவனிதலத்தில்வேறுண்டோ..............*
ஞானாதிபனேபோர்க்களத்தினாகக்கொடியோன்பணிந்துன்னைச்..*
சேனாபதியாகென்றாலுஞ்செலுத்தேனென்றுநீமறுத்தி............*
யானாலுய்வாரைவருமற்றவர்பாலுனக்குமன்புண்டே........ ...... *

(எ-று) நீங்காதஉன்னுடையவலுமைக்குச்சமானமாய்ப்பூமியிலே யொன்றுண்டோ, ஞானத்துக்கதிபனே யுத்தகளத்திலே சர்ப்பக் கொடிபடைத்த துரியோதனன் உன்னைவணங்கிச்சேனாதிபதியாயிரு வென்றுசொன்னாலும் நான்செலுத்தமாட்டேனென்றுமறுத்தாயா னால் பஞ்சபாண்டவர்கள்பிழைப்பார்கள் அவர்களிடத்தில்உனக்கும் விசுவாசம்உண்டேயென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு.(உஉ௪)

ஆயோதனத்திலடலரியேறனையான்றன்னையிவ்வாறு...............*
மாயோனுரைத்துத்தன்விரலின்மணியாழியைமண்ணிடைவீழ்த்தா
ன், சேயோனதனையெடுத்தவன்றன்செங்கைகொடுக்கவாங்காமல்..*
தூயோயூர்கோள்பரிதிதனைச்சூழ்ந்ததகல்வான்மீதென்றே.........*

(எ-று)யுத்தத்திலேபெருமைபொருத்திய ஆண்சிங்கத்தையொத்த அசுவத்தாமாவை இப்படிஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லித் தமதுவிரலி லிருந்த ரத்தினம்பதித்த மோதிரத்தைப் பூமியிலே நழுகவிட்டார் அசுவத்தாமா அதனையெடுத்துஅவர்கையிலேகொடுக்கவாங்காமல்பரி சுத்தமானவனே ஆகாயத்திலே சூரியனைப்பரிவேடஞ் சூழ்ந்ததென் றென்றவாறு. (உஉரு)

வரித்தாமரைத்தக்கண்டிருநெடுமால்வான்வாய்நோக்கவரிவிற்கைப் *
பரித்தாமாவுமாழியுடன்பரிதிவடிவந்தனைப்பார்த்தான்............*
கிரித்தாழ்கவிகைக்கருங்கள்வன்கிளர்நூல்முனிவன்மைந்தனையும்..*
பிரித்தானவனுஞ்சூளுற்றானென்றாரிருந்தபேரவையோர்...........*

(எ-று) செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய ஸ்ரீகிருஷ்ண தேவர்ஆகாயத்திலேபார்க்க நெடியவில்லைக்கையிலேயுடைய அசுவத் தாமாவும்மோதிரத்துடனே சூரியன்வடிவைப்பார்த்தான்கோவர்த்த னகிரியைக்குடையாசப்பிடித்தகள்வனாகியஸ்ரீகிஷ்ருணதேவர் துரோ

ஞாசாரிகுமாரனாகிய அசுவத்தாமாவையும்பிரித்தான் அவனும்சபத்
ஞ்செய்துபொருத்தானென்றார்கள் பெரியசபையிலிருந்தவர்களென்
றவாறு. (உஉஎ)

தனிவந்தகலுத்தூதனைப்போய்த்தானேயனுகித்தடஞ்சாப...... *
முனிவன்புதல்வன்மோதிரந்தொட் டருஞ்சூண்முன்னர்மொழிகின்
றானினிவந்துறவாய்நின்றாலுமெங்ஙன்றெளிவதிவனையெனத் ...*
தானிவந்தரசர்முகநோக்கிச்சொன்னானிடியேறன்னானே......... *

(எ-று) தனியேவந்துபோகுந்தூதனிடத்தேதானே பலவந்தமா
ய்ப்போய்த் துரோணாசாரிகுமாரனாகிய அசுவத்தாமாமோதிரத்தை
த்தொட்டு அரியசபதம் எதிரேசொல்லுகின்றான் ஆகையால்இனிவந்
துநம்முடனேசினேகமாய்நின்றாலும் எப்படியிவனையோக்கியனெ
ன்றறிவதென்றுகோபித்து ராஜாக்களுடையமுகத் தைப்பார்த்துச்
சொன்னான் இடியேற்றையொத்ததுரியோதனனென்றவாறு. உஉஅ.

துளியார்மதுவின்வலம்புரித்தார்த்துரியோதனன்முன்சொல்லியது
மொளியாரவைதயில்வாள்வேந்தரொருவர்க்கொருவருரைத்தனவுங் *
களியானையனான்செவிப்படலுங்கலங்கிச்சித்தமிவனொன்னைத்........*
தெளியாவண்ணம்பேதித்தான்றிருமாலென்றேசிந்தித்தான்........*

(எ-று) துளிகள்நிறைந்ததேனையுடைய நந்தியாவட்டமாலையைய
ணிந்ததுரியோதனராஜன் சொல்லியதும் பிரகாசநிறைந்த சபையி
லேவாளாயுதத்தையுடைய அரசர்கள் ஒருவர்க்கொருவர்பேசியவைக
ளும்களிப்பினைக்கொண்டயானைக்குச்சமானமாகிய அசுவத்தாமாகா
திலேவிழுந்தவளவில்மனங்கலங்கியிந்தச்சபையிலுள்ளவர்கள் என்னை
த்தமக்குஅனுகூலனென்று தெளியாதவிதம்பேதப்படுத்தினார் ஸ்ரீகி
ருஷ்ணதேவனென்று நினைத்தானென்றவாறு. (உஉகூ)

தண்ணந்துளபமுடியோனுந்தனித்தங்கிருந்துதன்மனதி ........ *
லெண்ணம்பலித்ததெனமகிழ்ந்தேயிளையோன்றனக்குவிடைநல்கி*
விண்ணின்றமரர்மிகத்துதிக்கவிதுரன்மனையின்மேவியபின்...... *
திண்ணங்கடவுட்குலவரசன்வருமாறறிந்துசிந்தித்தான்........... *

(எ-து) குளிர்ந்த துளபமாலையையணிந்தமுடியையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரும்தனிப்பட்டுஅங்கேயிருந்துதன்மனதிலேநினைத்த எண்ணம்பலித்ததென்றுசந்தோஷித்து அசுவத்தாமாவுக்குச்செலவுகொடுத்துவிட்டு ஆகாசத்திலிருந்ததேவர்கள் மிகவுந்துதிசெய்யவிதுரன் அரமனைக்குப்போனபின்பு தேவர்கட்கரசனாகிய இந்திரன்வரும்படி தெரிந்துநினைத்தாரொன்றவாறு. (உரூ0)

அந்தக்கணத்தில்வந்திறைஞ்சுமாகண்டலனைமுகநோக்கிக்......... *
கந்தத்துளபமுடியோனுங்கண்ணுங்கருத்துங்களிகூரத்.... ......... *
தந்தத்தொழிலினரிசுமந்தவிசினிடையேயுடனிருத்தி............ *
முந்தக்கருத்தினின்றநினைமுடிப்பானுபாயமொழிகின்றான்......... *

(எ-து) அந்தக்ஷணத்திலேவந்து வணங்கிய இந்திரன்முகத்தைப் பார்த்துவாசனைபொருந்திய துளபமாலையையணிந்தமுடியையுடைய ஸ்ரீகிருஷ்ணதேவரும கண்ணுங்கருத்துங் களிப்பையடைந்து யானைத்தந்தங்களாற்செய்த சிங்காசனத்திலேஉடனேவைத்துக்கொண்டு தன்கருத்திலே இருந்ததைமுடிக்கும்பொருட்டு உபாயஞ்சொல்லுகின்றானொன்றவாறு. (உரூக)

கிரியின்சிறகையரிபடையாய்கேண்மோவாண்மைக்களமீதில்...... *
வரிவெஞ்சிலைக்கைவிஜயனுக்குமாறாமுனிந்துவருகின்ற.......... *
வெரியுங்கனல்வாய்விடவரவொன்றிவனுக்குற்றபகையான......... *
வரியின்புதல்வன்றனக்கொருபேரம்பாகியதாரறியாதார் ......... *

(எ-து) மலைகளின் சிறகையறுத்த வஜ்ராயுதத்தையுடைய இந்திரனேகேள் ஆண்மைபாகயுத்தகளத்தில் நீண்டவெவ்வியவில்லையுடைய அர்ச்சுனனுக்கு மாறாகக்கோபித்துவருகின்ற விஷநெருப்பை வீசுகின்ற வாயையுடைய சர்ப்பமொன்று இவனுக்குப்பகையாகிய சூரியன்குமாரனான கர்னனுக்கு ஒரு அம்பாகி இருப்பதை அறியாதவர்கள்யாரொன்றவாறு. (உரூஉ)

கன்னன்விஜயன்றனக்கொல்லிற் கடற்பார்முழுதுங்கண்ணில்லா, மன்னன்புதல்வன்றனக்கேயா மொழிந்தோர் யாருமடித்திடுவார், முன்னஞ்சூதின்மொழிந்தபகை மு

டியாதிருக்கிலவர்க்கல்ல, நின்னெஞ்சறியயானறிய நினக்
கேவசையுநில்லையாமே.......................................... *

(எ-து) கர்னன் அர்ச்சுனனைக்கொன்றால் சமுத்திரஞ்சூழ்ந்தபூமி
முழுவதும் திருதராஷ்டிரன் புத்திரனாகிய துரியோதனனுக்கே வ
ரும், மற்றபேர்யாரும்இறந்துவிடுவார்கள். ஆதினாலேசொன்னபலக
யைமுடியாதிருந்தால், அவர்களுக்குக்குற்றமில்லை உன்மனமறியநா
னறிய உனக்கேகுற்றம் நில்லாகுமென்றார் ஸ்ரீகிருஷ்ணதேவர். எ-று.

கவசங்கணகுண்டலமென்றிரண்டும்புனையிற்கற்பாந்தத்
திவசம்பொரினுங்கன்னனுயிர் செகுப்பார்மண்ணிற் சில
ருண்டோ, வவசங்கிளைஞருறத்துணைவ ராற்றக்களத்திலட
லனுமத், துவசம்படைத்தோன் படுந்துயரந் துணைவா
வின்றேசொன்னேன்........................................ *

(எ-து) கவசம் சொர்ணகுண்டலமென்றுசொல்லு மிரண்டுந்தரி
ப்பானேயானால் கற்பமுடிவுநாள் வரைக்கும் யுத்தஞ்செய்தாலும்
கர்னனுயிரைப் போக்குவார் பூமியிலே சிலபேருண்டோ பந்துக்க
ளெல்லாம் அவசப்படஉடன்பிறந்தவர்கள் அழயத்தகளத்தில் அனு
மக்கொடிபடைத்த அர்ச்சுனன்படுந்துயரத்தைத் துணைவனே இன்
றேசொன்னேனென்றவாறு. (உருச)

வல்லார்வல்லகலைஞருக்கு மறைநூலவர்க்குங்கடவுளர்க்கு,
மில்லாதவர்க்குமுள்ளவர்க்கு மிரந்தோர்தமக்குந் துறந்த
வர்க்குஞ், சொல்லாதவர்க்குஞ்சொல்பவர்க்குஞ் சூழுஞ்
சமயாதியர்களுக்கு, மல்லாதவர்க்குமிரவிமக னரியதா
னமளிக்கின்றான்........................................ *

(எ-து) மாட்டாதவர்களுக்கும் கலையிலேவல்லவராகிய வித்துவா
ன்களுக்கும்; வேதத்தில்வல்லபிராமணர்களுக்கும் இல்லாதவர்களுக்
கும், உள்ளவர்களுக்கும், இரந்தவர்களுக்கும்? துறந்தவர்களுக்கும்;
சொல்லாதவர்களுக்கும், சொல்லுகிறவர்களுக்கும், சமையங்களிலே
விசேஷமானவர்களுக்கும் அப்படி அல்லாதவர்களுக்கும் சூரியன்
புத்திரனாகிய கர்னமகாராஜன் அரியதானங்கொடுக்கின்றான். எ-று.

மைந்தற்குறுதிநீவேண்டில்வல்லோய்முனிவர்வடிவாகிச்……… *
சந்தப்பனுவலிசைமாலைத்தானகரனைவிரைந்தெய்தி……………*
யந்தக்கவசகுண்டலங்களளிப்பாயென்றாலவனொன்று……… *
மிந்தப்புவியின்மறுத்தறியானுயிரோயெனினுமீந்திடுவா……… *

(எ-து) உன்புத்திரனாகிய அர்ச்சுனனுக்கு நீ உறுதிசெய்யவேண்டினையாகில் வல்லமையுள்ள இந்திரனேபிராமணருடையவடிவங்கொண்டு சந்தத்தையுடைய கவிமாலையைக்கொண்ட தானத்துக் கிடமாகிய கர்ணனிடத்திற்குச்சீக்கிரத்திற்போய் அந்தகவசகுண்டலங்களைத்தருவாயென்றுகேட்டால் அவன்ஒன்றுவது இந்தப்பூமியிலேயில்லையென்றுசொல்லியறியான்உயிரைக்கேட்டாலுங்கொடுப்பான்.எ-று.

இரண்டுமவன்பானீகவரிலிருந்தேரூர்ந்திப்படியரசர்……… *
திரண்டுவரினும்வெஞ்சிலைக்கைத்திண்டோள்விஜயனெதிர்நில்லார்*
முரண்டுபொருவிற்கன்னனுந்தன்முன்னேயெய்திமுடிசிதறிப்…*
புரண்டுமடியுமெனவணங்கிப்புத்தேளரசன்போகின்றான்……*

(எ-து) அந்தக்கவசகுண்டலங்களிரண்டையும் நீவாங்கிக்கொண்டாயானால்பெரியதேரிலேறிக்கொண்டுஇந்தப்பூமியிலுள்ளஅரசர்கள் திரண்டுவந்தாலும் வெவ்வியவில்லைக் கையிலேயுடைய புஜபெலமுள்ள அர்ச்சுனன்முன்னே நிற்கமாட்டார்கள். மாறுபட்டுப்பொருகின்றவில்லையுடைய கர்ணனும் அவன்முன்னேவந்து தலையறுப்புண்டுமண்ணிற்புரண்டுமடிவானென்று ஸ்ரீகிருஷ்ணதேவர் சொல்லஅதுகேட்டுவணங்கிப்போகின்றான்தேவர்களுக்கரசனாகியஇந்திரன்.எ-று

[ வேறு. ]

தண்டுதானெனக்குனிந்துடலமாத்தாளிணை தளர்ந்துதள்ளா
டக், கண்டியாவருங்கைதாக்குடையொன்று கைதனிற்கங்கை
நீர்நுளாயை,மொண்டுமேலுறச்சொரிந்ததாமெனநரைதிரையு
டன்மூப்பொருவடிவங்,கொண்டதாமெனவொருமுனியாகியே
கொற்றவன்வாயில்சென்றடைந்தான்…………………… *

(எ-து) சிவிகையின்றண்டுபோலத் தேகம்வளைந்து சுழற்சியுடையக் கால்கள்தளர்ந்து தள்ளாட எவர்களும்பார்த்துக்கைகொடுக்க ஒரு குடைபிடித்தகையிலே கங்கைநீரிலிருக்கும் நுலாயைமொண்டு மே

லேசொரிந்ததாகுமென்றுசொல்ல நனாதிரைகளுடேன மூப்புத்த
ன்மையே ஒருவடிவங்கொண்டதாமென்றுசொல்ல ஒருபிராமணவடி
வாகிக் கர்னன் அரமனைவாசலிற்போனான் தேவேந்திரனென்றவாறு.

அடுத்ததானமும்பரிசிலுமிரவலர்க்கருளுடன்முற்பகலளவும்...... *
கொடுத்துநாயகல்புகுந்தனனுனை நீகுறுகுகவென்றவன்கோயிற்.. *
றடுத்தவாயிலோர்மீளவுமுணர்த்தலிற்றலைவனுந்தருகெனவினாவின்
விடுத்தநரன்மறை முனியைமுன் காணவே வேந்தனுந் தொழுதடி
[வீழ்ந்தான்.

(எ-று) அடுத்திருக்கின்ற தானமும் யாசகமும் இரப்போர்க்குக்
கிருபையுடனேபதினைந்துநாழிகையளவும்கொடுத்துக் கர்னமகாரா
ஜன் அரமனைக்குப்போய்விட்டான் நாளையதினம்நீர்வாருமென்று
அவன் அரமனையில்தடுத்த வாசற்காரர் மறுபடியுஞ்சொல்லுதலால்
கர்னமகாராஜனும் அவரையழையுமென்றுசொலலச் சீக்கிரத்திலே
அவரும்போக அவரைக்கண்ட மாத்திரத்தில் கர்னனும் வணங்கினு
னென்றவாறு. (உருகஅ)

என்னமாதவம்புரிந்தனன்பரிந்துநீ ரீண்டெழுந்தருளுதற்கென்று*
பொன்னிருசனத்திருத்திமெய்யருளுடன் பூசையுமுறைமுறைபுரிய
அன்னவேதியன்றளர்ந்தவென்னடையினாலானதேமிற்பகலென்று *
சொன்னவேலையி னகைத்தனக் களிப்பனீ சொன்னவை யாவையு
[மென்றான்.

(எ-று) என்னதவஞ்செய்தேன் அன்புவைத்து நீர் இங்கே எழுந்
தருளுதற்கென்று பொன்னிற்செய்த ஆசனம்போட்டுஅதிலிருத்தி
உண்மைப்பத்திபுடனேகிரமமாகப்பூசைசெய்யஅந்தப்பிராமணன்
தளர்ச்சியையுடைய என்னுடையநடையினாலே இங்கேவர இரண்டு
சாமத்திற்கு மேற்பட்டதென்று சொன்னபோது கர்னமகாராஜன்
நகைத்துநீகேட்டபொருளெல்லாம்உனக்குக்கொடுப்பேனென்முன்
என்றவாறு. (உசய)

அருத்தியீதல்போற் சுரர்தருவினுக்குமற் றரிதுநீ யளித்தியோ
வென்று விருத்தவேதியன் மொழிந்திட நகைத்துநீ மெய்யுயிர்
விழைந்திரந்தாலும், கருத்திசேனுனக்களித்திலேனெனிலெதிர்
கறுத்தவர்கண்ணிணைசிவப்ப,வுருத்தபோரினிற்புறந்தருதிருபர்
போயுறுபதமுறுவனென் றுரைத்தான்.................. *

(எ-து) ஆசைப்பட்டவைகளைக்கொடுத்தற்கு பொன்மயமாகிய
தெய்வலோகத்திலிருக்கும்பஞ்சதருவுக்கும்அருமையாகும் நீகொடு
ப்பையாவென்று அந்தவிருத்தப்பிராமணன்சொல்லச் சிரித்து என்
னுயிரை அபேக்ஷித்து நீர்கேட்டாலும் கருத்துடனேஉமக்குக்கொ
டாமற்போவேனேயானால் பகைவர்கண்கள்சிவக்க எதிர்த்துப்பொ
ருகின்ற யுத்தகளத்திலேமுதுகுகாட்டுகின்ற அரசர்களடையும்பதத்
தையானடைவேனென்றான் கர்ணமஹாராஜனென்றவாறு. (௨௬௧)

வந்தவந்தணன்கவசகுண்டலங்களைவாங்கிநீவழங்கெனக்கென்னத்..*
தந்தனன்பெறுகைவவன்வழங்கவிண்டலத்திலோர்தனியசரீரி... *
யிந்திரன்றனைவிரகினான்மாயவனேவினான்வழங்கனீயெனவுஞ்... *
சிந்தையின்கணோர்கலக்கமற்றளித்தனன் செஞ்சுடர்த்தினகரன் சிறு
[வுன்

(எ-து) வந்தபிராமணன் நீ தரித்திருக்கின்றகவசகுண்டலங்களை
வாங்கிக்கொடுவென்றுகேட்க இதோகொடுத்தேன்கொள்வாயென்று
கொடுக்கஆகாயத்திலேஒரு அசரீரிவாக்குஸ்ரீகிருஷ்ணபகவான்ஒருஉ
பாயத்தினாலே இந்திரனை அனுப்பி வைத்தார் நீகொடுக்கவேண்டா
மென்றுசொல்லவும் மனத்திலேஒருகலக்கமில்லாமற்கொடுத்தான்சூ
ரியன்புதல்வனாகிய கர்ணமகாராஜனென்றவாறு. (௨௬௨)

அண்டர்யாவருமலர்மழை பொழிந்தனரந்தரதுந்துமியார்ப்ப
க், கொண்டல்வாகனன்கொண்டமெய் மொழிந்துதன்கோல
மெய்யுடனெதிர்நின்றான், கண்டுமாமனமுருகியேகளித்திடுங்கன்
னனுக்கநெடுங்கடவுள், மண்டுபோரினில்வயந்தருமிதுவென
மற்றொருகொற்றவேலெடுத்தே.............................*

(எ-து) அப்போது தேவர்கள்யாவரும் புஷ்பமாரிபொழிந்தார்
கள், தெய்வதுந்துமிசத்திக்க மேகவாகனனான இந்திரன்தான்கொண
டவிருத்தப்பிராமணவேடம்நீங்கித் தனதுநிசரூபத்துடனே எதிரே
நின்றான், அதுகண்டுமனமுருகிச் சந்தோஷித்த கர்ணமகாராஜனுக்
குஅந்தஇந்திரன் மிகுந்தயுத்தத்தில் இதுஜெயத்தைக் கொடுக்குமெ
ன்றுஒருவெற்றியுள்ள வேலாயுதத்தை யெடுத்தென்றவாறு. (௨௬௩)

வெலற்கருந்திறல்விஜயன்மேலொழிர்து நீவெஞ்சினமடங்கல்
போனெஞ்சிற்.கலக்கமொன்றறப்பொருதிறற்படைநீந்திடீசமோ

ர்க்கசக்கானே தன்னுயிரோ, விலக்குவந்தெதிர்மலைந்த போதிதந்
தெனவேவெனமறையையுமியம்பிச், சொலற்கரும்புகழ்சுரர்ப
திகொடுப்பவத்தோன்றலுந் தொழுதுகைக்கொண்டான்....*

(எ-து) வெல்லுதற்கரிய திறலையுடைய அர்ச்சுனன்மேலேவிடுவ
தையொழித்து நீ வெவ்வியகோபத்தையுடையசிங்கத்தைப்போல
நெஞ்சிலேயொருகலக்கமுமில்லாமல் போர்செய்கின்றகடோத்கச
னுடையஉயிரேஇதற்குலக்ஷியமாகும், அவன்வந்துஉன்னையெதிர்க்கு
ம்போதுஇதைவிடுவாயென்றுவேதமந்திரமுஞ்சொல்லிச்சொல்லுத
ற்கரியகீர்த்தியையுடையஇந்திரன்கொடுக்கஅந்தக் கர்னனும்வணங்கி
க்கையிலே வாங்கிக்கொண்டானென்றவாறு, (உசஉ)

நிரந்தரம்புகழ்நிலைபெறுங்கன்னனை நெஞ்சுறமகிழ்ந்தவனிறு
த்திப், புரந்தரன்பசுந் தண்டுழாயணிந்திடும் புயல்வணனிருந்
துழிப்போந்தே, யிரந்துசென்றுதான்மொழிந்ததுமவ்வளவீ
ந்ததுமாங்கவற்கிசைத்தான், வரந்தருந்திருமாலதைவினவிய
வ்வாசவன்றனக்குரைவழங்கும்..............................*

(எ-து) எப்போதுநிலைபெற்ற புகழையுடைய கர்னமகாராஜன்
செய்கையைக்கண்டு மனமகிழ்ந்து அவனைஅங்கேநிறுத்திவிட்டுஇந்தி
ரனுனவன்பசியகுளிர்ந்த துளபமாலையையணிந்தமேக வண்ணரான
ஸ்ரீகிருஷ்ணபகவானிருந்த இடத்திற்குப்போய்த்தான்போய்க்கேட்
டதும் கர்னன்கொடுத்ததும் அவருக்குச்சொன்னான் அப்போதுவர
த்தைத்தருகின்றஸ்ரீகிருஷ்ணபகவான் அதைக்கேட்டுஅந்தஇந்திரனு
க்குச்சொல்லுவானென்றவாறு. (உசரு)

உண்மையாகவெஞ் சமர்முகத்தெறிபடை யொன்றும்வந்துட
லுறவொட்டாத், திண்மையாலுயர் கவசகுண்டலங்களைச்சென்
றிரந்தவற்கிவன்கொடுத்தா, னெண்மையாயினுங்கிளைஞரோபே
ரப்பினுமிபல்பிலாப்புன்செல்வரியார்வண்மையாளர்தம்மாருயி
ர்மாற்றலர்கேட்பினுமறுக்கிலாரென்றே.................*

(எ-து) சத்தியமாக வெவ்வியயுத்தமுகத்திலே வீசுகின்றஆயுத
ங்களொன்றுந் தேகத்திலே படவொட்டாதஉறுதியாலுயர்ந்தகவசகு

ணிடலங்களை இரந்த இந்திரனுக்கு அந்தகர்னன் கொடுத்தான் ஆகையா
லெளிசாயிருந்தாலும் பந்துக்களேயேற்றாலும் இயற்கைகுணமில்
லாத அற்பசெல்வத்தையுடையவர்கள் கொடுக்கமாட்டார்கள் தியாகி
யானவர்கள் தம்முடைய உயிரைச்சத்துருக்கள் கேட்டாலும் இல்லையெ
ன்றுமறுக்கமாட்டார்களென்றுசொல்லினாளென்றவாறு. (௨௪௬)

வாசவன் றனைவிடைகொடுத்ததன் பின்வந்தகாரியந்தனைமுடிப்
பான், கேசவன் றனதாதையோடுதித்திடுங்கேண்மைகூர்தெரி
வையைக்கிட்டித், தேசவன்றருங் குருசில்பால்விரைவினிற்செ
ல்கெனப்பயந்தசேயிழையும், பாசமுந்துறமாயவனேவலாற்
பாதபங்கயஞ்சிவப்பித்தாள்,.......................... .........*

(எ-து) தேவேந்திரனுக்குச்செலவுகொடுத்து அனுப்பிவிட்டுத்
தான்வந்தகாரியத்தை நிறைவேற்றும்பொருட்டுக் கிருஷ்ணரானவர்
தன்தகப்பனோடுபிறந்தஉறவுமிகுந்தகுந்திதேவியிடத்திற்குப்போய்
ச்சூரியன் புதல்வனாகியகர்னனிடத்திற்குச்சிக்கிரத்திற்போவென்றார்
அவளும்அன்பானதுதள்ள ஸ்ரீகிருஷ்ணபகவானுடையஏவுதலினாலே
தன்னுடையபாதஞ்சிவக்கப்போனாளென்றவாறு. (௨௪௭)

வந்துகுந்திநின் கோயிலெய் தினளென வாயிலோருரைத்திட
மைந்தன்,முந்துமன்புடன் றெழுதெதிர்கொண்டு போய்மு
றைமையாலாசனத்திருத்த, விந்துவின்கிரணங்கள்கண்டுளமகி
ழ்ந்திரங்கிவன்கனாகடந்தேறிச்,சிந்துவெண்டிரைச்சிந்துவொ
த்துருகிடுந்தெரிவையோடுரைபலசெப்பும்...... ..........*

(எ-து) குந்திமாதேவி உன்னரமனையில்வந்தாளென்றுகாவற்கா
ரர்சொல்லப் புத்திரனாகியகர்னனானவன் முந்தியஅன்புடனேவணங்
கி எதிர்கொண்டுபோய்க் கிரமப்படி ஆசனங்கொடுத்து அதிலேயிரு
க்கச்சொல்லஅப்போது சந்திரகிரணங்களைக்கண்டு மனமகிழ்ந்து இ
ரக்கமுற்றுவண்மைபொருந்திய கனையைக்கடந்து அலையைவீசுகின்
றசமுத்திரத்தையொத்து மனமுருகும் அந்தத்தாயுடனேபலபேச்சு
கள்பேசுவான் அந்தக்கர்ணமகாராஜனென்றவாறு. (௨௪௮)

அன்னைவந்ததென்னருந்தவப்பயனென வன்பினாலின்புறவணங்கி*
யென்னைவந்தவாறியம்பெனமற்றவளீன்றதாயானுனக்கென்று ...*

முன்னைவந்தொருமந்திரத்தவமுனிமொழிந்ததுங்கதிரவன்முகத்தாற்
பின்னைவந்ததும் பேழையில்விடுத்ததும்பிழையிலாதுரைத்திடக்கே
[ட்டே

(எ-து) தாயேநீவந்தது யான்செய்ததவத்தின் பிரயோசனமென்
று அன்பினாலே இன்பம்பொருந்த வணங்கிவந்தகாரியமென்னவென்
றுகேட்கஅவள் தான் உனக்குப்பெற்றதாயென்று முன்னே தூர்வாச
முனிவந்துஒருமந்திரஞ்சொன்னதும் சூரியனாலேநீபிறந்ததும்உன்
னைப்பெட்டியில்விடுத்ததும்பிழையில்லாமற்சொல்லக்கேட்டு.எ-று.

மாயனார்விரகிதுவெனமனத்தினின் மதித்துவந்தளிந்திடும்வள்
ள,னீயுநாளென்னைப்பயந்தவளென்னினு நின்மொழிநெஞ்சுறத்
தேறேன், பேயனார்சிலர்பேரறிவின்மையார்பெற்றதாயெனக்
கெனவந்து,தூயநாகரிகத்துகிலாலவர்துன்பமுற்றென்புருவானார்

(எ-து) இதுஸ்ரீகிருஷ்ணபகவானுடைய உபாயமென்றுமனதிலே
நினைத்துவேண்டியவைகளைக் கொடுக்கப்பட்ட தியாகியாகியகர்ணம
காராஜன் நீ அந்தநாளிலேஎன்னைப் பெற்றவளென்றுசொன்னாலும்
உன்பேச்சை என்மனம்பொருந்தத்தெளியமாட்டேன், பேயையொ
த்தசிலபேர்நல்லஅறிவில்லாமையால் என்னைப்பெற்றதாய்மாதொன்
றுவந்துபரிசுத்தமாகியநாகரிகமாயுள்ள ஒருவஸ்திரத்தால்அவர்களெ
ல்லாந்துன்பப்பட்டு எலும்புருவானார்களென்றவாறு. (௨௫௰)

அடாதுசெய்தவர்படாதுபட்டாரெனுமங்கர்கோனருள்
மொழிகேட்டுத், தடாதவன்புடைக்கெடாததூய்மொழி
பகர்ந்தையலுமையலிற்றவிர்ந்து,படாந்தனைக்கொடுவாவெ
னவருதலும்பயந்திலேனெனிலெனைமுனியென்,றெடாவி
ரித்ததைத்துடற்படப்போர்த்துமன் றீன்றதாயாமெனவி
ருந்தாள்.......................................... *

(எ-து) அடாதகாரியத்தைச்செய்து அவர்கள்படாதபாடுபட்டார்
களென்றுசொல்லும் அங்கதேசாதிபதியாகிய கர்ணமகாராஜன் சொ
ல்லைக்கேட்டுத்தடுக்காத அன்பையுடையகெடாதபரிசுத்தமாகியசொ
ல்லைச்சொல்லிய குந்திமாதேவியும் மயக்கத்தினின்றுநீங்கி அந்தவஸ்
திரத்தைக்கொண்டுவாவென்றுவாங்கிஉன்னைப்பெறுதிருந்தேனேயா

ஞல்எல்லைக்கோபியாயென்று அலதயெடுத்துவிரித்துஉதறித்தேக
முழுவதும்போர்த்தும்அன்றுபெற்றதாயென்றுசொல்லவிருந்தாள்

இருந்ததாயுமங்கீன்றவள்போலவேயிருதடங்கொங்கைபா
ல்சொரிந்தா, ளருந்துபாலகன்போலவேயிளவலுமருந்தி
யேபவிதிவழியகன்றான், புரித்தவன்பொடுமருகுறத்தழுவி
யேபொன்முடியுச்சிமோந்தன்பால் பரிந்துநானுமன்று
னைவளர்த்தெடுத்திடப்பாக்கியஞ்செய்திலேனென்றாள் *

(எ-று) இப்படியிருந்ததாயும் அங்கேபெற்றவள்போலேபருத்த
இரண்டுகொங்கைகளிலும் பால்சொரியநின்றாள் அதைப்புசிக்கிற
இளம்பிள்ளைபோலக்கர்ணனும் புசித்துவிதிவழிநீங்கினான்யிருந்தஅ
ன்புடனேபக்கத்திலே பொருந்தத்தழுவிப்பொன்முடியணியும்உச்
சியைமோந்து அன்புடையவளாய்ப்பரிவுசெய்து நானும்அன்றுன்
னைவளர்த்தெடுக்கப் பாக்கியஞ்செய்யவில்லை யென்றாள் குந்திமா
தேவியென்றவாறு. (௨௫௨)

வருகநீமதலாயிளைஞராவருநின்மலரடியன்பினால் வணங்கி
யொருமையாய்மனமொத்தேவலேபுரியவொருதனிற்செய்
யகோலோச்சி, அரசெலாம்வந்துன்கடைத்தலை வணங்கவா
ண்மையுஞ்செல்வமும்விளங்கக்,குருகுலாதிபர்க்குங் குரிசி
லாய்வாழ்வுகூர்வதேகடனெனக்குறித்தாள்......... ......*

(எ-று) புத்திரனே நீவரக்கடவாய் உன்தம்பிமாராகியபஞ்சபா
ண்டவரும்உன்னுடையமலர்போன்ற பாதத்தைப்பத்தியினாலேவண
ங்கிஒருமித்துமனமொத்துஏவல்செய்ய ஒப்பற்றசெங்கோல் செலுத்
திராஜாக்களெல்லாம்வந்து கடைவாயற்படியில்நின்று வணங்கஆண்
மையுஞ்செல்வமும்விளங்கக் குருகுலத்திலேயிருந்தஅரசர்களுக்கெ
ல்லாம் அரசனாகிவாழ்வையடைவது முறைமையென்றுசொன்னாள்
குந்திமாதேவியென்றவாறு. (௨௫௩)

பெற்றநீர்மகவன்பிலாமையோவன்றிப்பெரும்பழிநாணி
யோவிடுத்தீர், அற்றைநாட்டொடங்கியென்னையின்றளவு
மாருயிர்த்துணையெனக்கருதிக், கொற்றமாமகுடம்புனை

நீதரசளித்துக்கூடவுண்டரியதம்பியருஞ், சுற்றமாணவரு
மென்னடிவணங்கத் தோற்றமுமேற்றமுமளித்தான்...*

(எ-து) என்னைப்பெற்றநீர்பிள்ளையாசையில்லாமையோ அல்லா மல்பெரியபழிக்கு நாணியோவிட்டுவிட்டீர்அன்றுதொடங்கி இன்றளவும்என்னை உயிர்த்துணையாகநினைத்து வெற்றியுள்ளபெருமைபொருந்தியமுடிசூட்டி அரசளித்துக்கூடவுண்டுதன் னுடையஅருமையாகியதொண்ணூற்றொன்பது தம்பிமாரும்பந்துக்களும்என் னுடைய பாதத்தைவணங்கப் பிரகாசத்தையு முயர்வையுங்கொடுத்தானென்றவாறு. (உ௫௪)

மடந்தைபெறத்திருமேகலைமணியுகவேமாசறத்திகழுமே
காந்த, யிடந்தனிற்புரிந்து நானயர்ந்திருக்கவெடுக்கவோ
கோக்கவோவென்றான், திடம்படைத்திடுமிராஜராயனுக்
குச்செருமுனைச்சென்றுசெஞ்சோற்றுக்கடன்கழிப்பது
வேயெனக்கினிபுகழுங்கருமமுந் தருமமுமென்றான்..*

(எ-து) குற்றமற்றுப் பிரகாசிக்கின்ற ஏகாந்தத்தானத்தில்அவன் பாரியினுடைய பொன்னினாற்செய்த அழகியமேகலைமணியுதிரச்செய்து அவன்வருதலைக்கண்டு நான்வருத்தப்பட்டுக்கொண்டிருக்க,அப்போதுஎனக்குத்திடஞ்சொல்லி அந்தமணிகளையெடுக்கவோஎடுத்துக்கோக்கவோவென்றான் அப்படிப்பட்டமெய்மைபடைத்துள்ளஅரசர்க்கரசனாகிய துரியோதனனுக்கு யுத்தமுகத்திற்போய்ச்செம்மையாகியசோற்றுக்கடன்கழிப்பதுவே இனிஎனக்குக்கீர்த்தியுந்தொழிலுந்தருமமுமென்றான் கர்ணமகாராஜனென்றவாறு. (உ௫௫)

பின்னையும்பற்பன்மொழிந்தபின் பலவும்பேசிலென்பூச
லோவிளைந்த,துன்னிவந்திங்ஙனென்னை நீரழைப்பதுண்
மையாயுள்ளவாறுரைமி, னென்னமைந்தனுமிப்பரிசினு
லுரைப்பவின் றறத்துறந்தவன்றையிலும்,அன்னை நெஞ்சு
ழித்தேயிருகணிர்சொரியவலறிவாய்குளறிநொந்தழுதாள்

(எ-து) மறுபடியும்அநேகவார்த்தைகள்பேசி இனிப்பலவார்த்தைகள்பேசியாவதென்ன! யுத்தம்விளைந்திருக்கின்றது, என்னை இப்போதுநீர்நினைத்துவந்தழைப்பது உண்மையா! உள்ளபடிசொல்லு

மென்றுகர்ணமகாராஜன் இத்தன்மையினாலே சொல்லப்பெற்றஆற்றிலேவிட்டஅன்றையினும் மனமழிந்துஇரண்டுகண்களிலும்நீர்சொரியஅலறிவாய்குழறிநொந்தழுதாள்குந்திமாதேவியென்றவாறு *

ஆண்டமாமகனும்பிருகணீர் துடைத்தவ்வன்னையைப்பன்
முறைதேற்றிமூண்டவல்வினையின்பயனலாதியார்க்குமு
யற்சியால்வருவதொன்றுண்டோ, வேண்டும்யாவையுமே
தருகுவேனீரும்வேண்டிய வேண்டுகவென்னப், பாண்டு
வின்றிருமா மனைவியுமதற்குப் பண்பினு வின்னபப
ணித்தாள்.......................................................*

(எ-து) கர்னனாகியபுத்திரனும் இரண்டுகண்களினின்றும்வருகின்றநீரைத்துடைத்து அந்தத் தாய்க்குப்பலதரந்தேறுதல் சொல்லிமூண்டிருக்கின்றதீவினைப்பயனல்லாமல்யார்க்குமுயற்சியினாலேவருகிறகாரியமொன்றுண்டோ நீர் என்னகேட்கிறீரோ அவையெல்லாந்தருவேன் நீர்விரும்பியதைக்கேளுமென்றுசொல்லப் பாண்டுமஹாராசாவினுடையமனைவியான குந்திமாதேவியும் அதற்குஇனியகுணத்தோடு இதுவேண்டுமென்றுசொன்னாளென்றவாறு. (௨௬௭)

பார்த்தன்வெஞ்சமரினின்னுடன்மலைந்தாற்பகைப்பெரும்பா
ந்தளம்பகழி, கோத்தலும்பிழைத்தான் மறித்துநீ விடுத்துக்
கோறலென்றொருவரங்குறித்தாள்,வாய்த்தமற்றவர்களினாலொ
ன்றவரை மலையலென்றொருவரங்குறித்தாள், மூத்தவன்காதலி
னானர்தம்பொருட்டான்மொழிந்தவைகேட்டிவைமொழிந்தான்.

(எ-து) அர்ச்சுனன்வெவ்வியயுத்தத்தில் உன்னுடனேயுத்தஞ்செய்தால்பகையையுடைய பெரியநாகாஸ்திரத்தைக்கோத்துத்தொடுத்தவளவில்தப்பினால் இரண்டாந்தரமும் விட்டுக்கொல்லாதேயென்று ஒருவரங்கேட்டாள் மற்றபாண்டவர்களும்தம்பிமாரொன்று அவருடனேபோர்செய்யாதேயென்று ஒருவரங்கேட்டாள்,மூத்தவனாகிய கர்னன்தம்பிமார்பொருட்டுத் தாய்சொன்னவைகளைக் கேட்டு இவைசொல்லுவானென்றவாறு. (௨௬௮)

தெறுகணையொன்றுதொடுக்கவுமைந்து !செருச்செய்வான்
சென்னியோடிருந்தால், மறுகணைதொடுப்பதாண்மையோவ

வியோமானமோமன்னவர்க்கறமோ, வுருகணையொன்றேபாரி
த்தன்மேற்றொடுப்பனெழுந்துளோ ருய்வதொன்றாத்தான்,
றழுகணல்லவர்க்குந்தழுகணவர்க்குந் தண்ணளிநிறைந்தசெ
ங்கண்ணான்........................................................ *

(எ-து) கொள்லப்பட்டபாணம் ஒன்றுதொடுக்கவும் எதிரிட்டு யுத்தஞ்செய்வோன் சிரசுடனே தப்பியிருந்தால் மறுகணைதொடுப்பதாண்மையோ ! வல்லமையோ? மானமோ ! ராஜாக்களுக்குத் தருமமோ ? ஒருகணையே அர்ச்சுனன்மேல்விடுவேன் மற்றப்பேர்பிழைப்பார்களென்றுசொன்னான் அவன்யாரென்றால் நல்லவர்களுக்கும்பொல்லாதவர்களுக்கும் தண்ணியகிருபைநிறைந்த சிவந்தகண்களையுடைய கர்ணமகாராஜனென்றவாறு. (உருகூ)

பெருவரமிரண்டும்பெற்ற பின்றன்னைப் பெற்றதாயினைக்
கரங்குவித்துத், தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசர
ங்களுக்கெலாந்தாயீர், வெருவருமமரிற்பார்த்தனாலடியே
ன்வீழ்ந்தபோதவனியரறிய, மருவருமுலைப்பாலெனக்
களித்துந்தம்மகனெனும்வாய்மையுமுரைப்பீர்.......*

(எ-து) பெரியவரமிரண்டும்பெற்றபின்பு தன்னைப்பெற்றதாயை கைகுவித்துவணங்கிநீயெனக்குத்தருகின்றவரங்களிரண்டுண்டு உலகத்திலேசராசரங்களுக்கெல்லாந் தாயானவரே அஞ்சத்தக்கயுத்தகளத்தில் அர்ச்சுனனாலேநான் வீழ்ந்தபோது இவ்வுலகத்தையாளும் ராஜாக்களறியமுலைப்பாலெனக்குக்கொடுத்து நான் உம்முடையபிள்ளையென்கிற உண்மையையுஞ்சொல்லுவீரென்றவாறு. (உகூம)

உய்வருந்திறல்வெம்போர்முடிப்பளவு முமக்குநான்மக
னெனுந்தன்மை, யைவருமறியாவண்ணம் நீர்காட்டீரல்ல
தங்கவர்சிறிதறியில், மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்
கேவழங்குவர்வழங்கினால்யானென், கைவருந்துணைவன்ற
னக்கலால்வழங்கேன் கடைப்பிடிசருமமீதென்றான்... *

(எ-து) பிழைப்பதற்கரிய வெவ்வியயுத்தமுடிகிறவரைக்கும் உம
க்குநான்பிள்ளையென்கிறதன்மையைப்பஞ்சபாண்டவர்கள் அறியாத

விதம் நீர்காத்தல்வேண்டும் அல்லாமல் அவர்சிறிதாவ தறிந்தால் கரு ங்கடல்சூழ்ந்த பூமியெல்லாமெனக்கேகொடுப்பார்கள் கொடுத்தால் யான் என்னுடைய தமையனாகிய தரீமபுத்திரனுக்குக்கொடுப்பனே யல்லாமல்வேறொருவருக்குங்கொடுக்கமாட்டேன் இந்தக்காரியத்தை மறவாதேயென்றான் கர்னமகாராஜனென்றவாறு. (உகூக)

என்றலுமதுகேட்டீன்றதாயொக்கு மென்றுகொண்டிவ் வரந்தேர்ந்து,வன்றுயர்மேன்மேல்வளரயான்றளரா வகை யுயிருனக்குமுற்பெயர்வ,தென்றினியென த்தன் கண்கணீ ர்சொரியவினைந்துனைந்தழுதழுதிரங்கி, நின்றதன்மகனை த்தழீஇயவனிறுத்தியாதவனிருந்துழிசென்றாள்...... *

(எ-று) அப்படிசொன்னவளவில் அதுகேட்டுப்பெற்றதாயாகிய குந்திமாதேவியுஞ்சரியென்று இந்தவரங்களிரண்டையுங்கொடுத்தவ ண்மைபொருந்திய துக்கமேலுமேலுமுண்டாக இனியான்றளராத விதம் உயிருனக்குமுன்னே நீங்குவதென்று கண்களிலிருந்து நீர் சொரியநைந்துநைந்து அழுதழுது இரக்கமுற்றுநின்ற தன்பிள்ளை யைத்தழுவிக்கொண்டு அங்கேநிறுத்திவிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் யிருந்த இடத்திற்போனாளென்றவாறு. (உகூஉ)

கன்னனுங்குந்திகர்னனோடுரைத்த கருத்தெலாந்திருத்தமாக் கேட்டு, எண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தத்தவணங்கையவ்வில் விடையிருத்தித், தன்னளியுடன்றன்பின்வருநிருபர் தம்மையு முறைமுறைநிறுத்திப், பண்ணமர்தடந்தேர் மீதுகொண்டன் றே பாண்டவருறைநகரடைந்தான்.................... *

(எ-று) ஸ்ரீகிருஷ்ணதேவரும் குந்திமாதேவியானவள் கர்னனோடு சொல்லிய கருத்தையெல்லாம் திருத்தமாகக்கேள்விப்பட்டு நம்மு டைய எண்ணமெல்லாம்நிறைவேறியதென்று மனமகிழ்ந்து-அவளை அந்தவீட்டிலே நிறுத்திவிட்டு குளிர்ந்ததயவுடன்பின்னேவந்த அர சர்களையும் அங்கங்கேநிறுத்திவிட்டு உறும்பமர்ந்த விசாலம்பொ ருந்திய தேரின்மேலேறிக்கொண்டு அப்பொழுதே பாண்டவர்களி ருக்கின்றநகரத்தையடைந்தார் ஸ்ரீகிருஷ்ணதேவனென்றவாறு.உ.கூ

துதுபோயரவத்துவசனேடுறுதி சொன்னதுமறு
த்தவன்சினந்து, மோதுபோர்புரியத்துணிந்ததும்
விதுரன்முரிவில்லிறுத்ததுங்கங்குற்,போதுபோர்
வஞ்சம்விளைத்ததுங்கன்னன் புரந்தரற்கீந்ததும்ப
யந்த, மாதுபோய்வரங்கள் பெற்றவை யொழிய
மற்றெலாமைத்துனர்க்குரைத்தான்............ *

(எ-து) துதுபோய் சர்ப்பக்கொடிபடைத்ததுரியோதனனுக்கு உறுதிசொன்னதும்-அதைஅவன்மறுத்துக்கோபித்துமோதப்பட்ட யுத்தத்துக்குச் சம்மதித்துத் துணிந்ததும் விதுரனுனவன் வலிமையுள்ள தன்வில்லையொடித்ததும் இராத்திரியில் நிலவறைவெட்டித் தனக்குவஞ்சகஞ்செய்ததும் கர்னன் கவசகுண்டலங்களைத் தேவேந்திரனுக்குக்கொடுத்ததும் பெற்றகுந்திமாதேவி கர்னனிடத்திற்குப் போய்ப் பெற்றவரங்கள்,தவிர மற்றவைகளெல்லாம்மைத்துனராகிய பஞ்சபாண்டவர்களுக்குச் சொன்னர் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி யென்றவாறு.

(உகூச)

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமிதூது

முற்றிற்று



முற்றும்.